

॥ श्रीगायत्री ॥ ॥ श्रीसावित्री ॥

॥ श्रीसरस्वती ॥ ॥ श्रीसन्ध्या ॥

## श्री समष्टिगायत्री

मुक्ताविद्रुम हेमनीलधवळ च्छायै मुखै: त्रीक्षणै:
युक्तां, इन्दुकलानिबद्धमकुटां, तत्वार्थ वर्णात्मिकाम् ।
गायत्रीं, वरदाभयाङ्कुशकशा: शुभ्रं कपालं, गदां,
शङ्खं, चक्रं, अथारविन्दयुगळं हस्तै: वहन्तीं भजे ॥





# ஏழாம் ஸ்கந்தம்

ऐश्वर्यमिन्दुमौलेरैका त्म्यप्रकृतिकाञ्चिमध्यगतम्
ऐन्दवकिशरशेखर मैदंपर्यं चकास्तिनिगमानाम् ॥

ஐஸ்வர்யமிந்துமௌளே ரைகாத்மயப்ரகிருதி காஞ்சிமத்யகதம்
ஐந்தவகிஸோரஸேகர மைதம்பர்யஞ் சகாஸ்திநிகமாநாம்.

ஓம் ஹ்ரீங்கார பீஜாயை நம:

## 1. பிரமன் தோற்றம்

சர்வஜ்ஞான போதகராகிய சூதமுனிவர் தவசிரேஷ்டர்களாகிய நைமிசாரணியவாசிகளைப் பார்த்துக் கூறுகின்றார் :

ஓ பெரியோர்களே ! ஸ்ரீ தேவி பாகவதத்தின் பூர்வபாகத்தை யான் சொல்லக்கேட்டு வந்தீர்களன்றோ? இனி உத்தரபாகத்தையுங் கூறுகின்றேன், கேட்பீர்களாக. பரீக்ஷித்தினுடைய புத்திரனும் தர்ம ஜ்ஞான சிகாமணியும் ராஜரிஷியுமாகிய ஜனமேஜய மகாராஜன், வியாசபகவா னுபதேசித்துவந்த மாயாவிலாச வைபவத்தைக் கேட்டு மனக்களிப்புடையவனாய்ப் பணிந்து பிரார்த்திக்கின்றான் :

ஓ சுவாமிகாள் ! மஹாத்புதமாகிய பூர்வபாகத்தைக் கேட்டு அநேக தத்வார்த்தங்க ளுணரப்பெற்று ஆனந்த முற்றேன். இனி சூரிய சந்திர வம்சங்களிற் றோன்றினவர்களான அரசர்களுடைய வம்ச விஸ்தாரங்களைக் கேட்க விரும்புகின்றேன். ஓ முற்று முணர்ந்தவராகிய முனிவரே ! அவ்விரண்டு வம்சங்களிலுந் தோன் றிய அரசர்கள் பராசக்தி பக்தர்களென்று கேள்விப்பட்டிருக்கின்றே னாகலானும் தேவீபக்தர்களுடைய சரித்திரங்களைக் கேட்கின்றவர்கள் சகல பாபங்களினின்று நீங்கிப் பிரபஞ்சத்தில் விருத்தியடைந்து ஞானப்பிரகாச முடையவராவாரென்று நிச்சயிக்கப் பட்டிருத்த லானும் அவ்விருவம்சத்தாருடைய விஸ்தாரங்களைச் சிரவணஞ் செய்ய ஆவலுள்ளவனா யிருக்கிறேன் என்று விண்ணப்பித்தனன். (1–5)

வியாச பகவான் மனமகிழ்ந்து முகமலர்ந்து கூறத்தொடங் கினர் : செல்வத்துட் செல்வமாகிய செவிச் செல்வம் வாய்க்கப் பெற்ற செல்வனே ! நீ விரும்பியபடி சந்திரசூரிய வம்சங்களிற் றோன்றிய அரசர்களுடைய வம்சாவளியேயன்றி இதரமான ராஜாக் களுடைய சரித்திரங்களையும், விஸ்தாரமாய்ச் சொல்லுகிறேன், கேட் பாயாக. அப்பா குழந்தாய் ! பூர்வத்தில் நாபிக்கமலத்தினின்றுந் தோன்றிய நான்முகன் தேவியை ஆராதித்துத் தவஞ்செய்து அவள் அனுக்கிரகத்தால் வேண்டிய வரங்கள் பெற்று பிரபஞ்ச சிருஷ்டி செய்ய எத்தனப்பட்டு மானிடரை மானசிகமாகச் சிருஷ்டித்தான். அவர்கள் நாளுக்குநாள் விருத்தியாய் வருதலில்லாமையைக் கண்டு தனது மனதினின்றும் மரீசி, அங்கீரசர், அத்திரி, வசிஷ்டர், புலகர், கிரதர், புலஸ்தியர் என்கிற எழுவரையும் ஜனகாதி நால்

*

வரையுஞ் சிருஷ்டித்தான். இவர்களைச் சிருஷ்டித்த பின்னர் மேன் மேலுஞ் சிருஷ்டி செய்யவேண்டுமென்று ரோஷம் பிறந்தது. அந்த ரோஷத்தினின்று ருத்திரமூர்த்தியும் உத்ஸங்கத்தினின்று நாரதரும், அங்குஷ்டமாகிய பெருவிரலினின்று தக்ஷப்பிரஜாபதியும் இடது கைப் பெருவிரலினின்று சர்வாங்க சுந்தரிகளாயும் புராணங்களால் பிரசித்தி பெற்றவர்களாயுமுள்ள தக்ஷபத்தினிகளாகிய வீரிணி, அஸிக்னி என்னும் இருவருந் தோன்றினர் என்றனர்.

சூதர் கூறுகின்றார்: ஓ ஸனகாதி மஹரிஷிகாள்! இந்தத் தக்ஷபத்னியிடத்தினின்று நாரதர் தோன்றினாரென்று வியாசர் சொல்லவும், ஜனமேஜயன் வினவுகின்றான்: ஓ பிரம்மரிஷியே! தேவரீர் இப்போது சொல்லிவந்ததில் பிரம்மாவின் மானசபுத்திர ரான நாரதமுனிவர் தக்ஷபிரஜாபதிக்குப் புத்திரரானாரென்றால் எப் படிப் புத்திரராயினர்? அவனுக்குப் புத்திரராம்படிச் சாபமிட்டவ ரார்? அதற்குக் காரணமென்னை? பூர்வஜன்ம மெவ்வண்ணம் போயிற்று? இவையெல்லா மெனக்குச் சொல்ல வேண்டு மென்றனன். (6–17)

வியாசர் சொல்லுகிறார்: ஓ அரசனே! பிரம்மதேவர் தக்ஷபிர ஜாபதியையுண்டாக்கி அவனைநோக்கி, நீ எண்ணிறந்த பிரஜைகளை யுண்டாக்குவதாகிய முயற்சியில் ஆவலுடையவனாயிருத்தல்வேண்டு மென்று கட்டளையிட, அவனும் அவ்வெண்ணத்திலேயே மிக்க ஆவ லுடையவனா யிருந்தபடியினால் அதனை யங்கீகரித்தவனாய்த் தன் மனையாளுடன் கூடி ஐயாயிரம் பிள்ளைகளைப் பெற்று அவர்களை நோக்கி, ஓ புத்திரர்களே! நீங்க ளொவ்வொருவரும் பிரஜைகளை யுண்டாக்குந் தொழிலில் ஊக்கமுடையவர்களா யிருந்து அதற்காக வேண்டிய முயற்சிகளைச் செய்யுங்களென்றான். அவர்களும் அம் முயற்சியில் தலைப்பட்டு முயன்றிருக்கும்போது நாரத முனிவர் கால தத்துவத்தால் பிரேரேபிக்கப்பட்டவராய் அவர்களைப் பார்த் துச் சிரித்துக்கொண்டே கூறுகின்றார்: ஓ பிள்ளைகாள்! நீங்க ளனைவரும் சிருஷ்டிக்குந் தொழிலில் முயற்சியுடையவர்களாகக் காணப்படுகின்றீர். இம்முயற்சியில் நீவிர் தலைப்பட்டது பற்றி நான் மிகவுஞ் சந்தோஷிக்கிறேன்; ஆயினும் பிரஜைகளைச் சிருஷ்டிக்க வெண்ணிய நீவிர் பூமி இவ்வளவு விசாலமுடைய தென்று முன்னரறிந்தன்றோ, அவ்வளவுக் கேற்பச் சிருஷ்டிக்க வேண்டும். அங்ஙனமிருக்க அதனை யெண்ணாது பிரஜைகளைச் சிருஷ்டிக்கத் தொடங்கினீர்களே; அவர்களிருப்பதற் கென்செய் வீர்? நீரே ஆலோசனை செய்மின்; உங்கள் செயலை யுலகத்தார் காண்பாராயின் பரிகசிப்பார்களென்பதில் ஸம்சயமில்லை. ஆகை யால் பூமியின் பிரமாணத்தை முன்னர் தெரிந்துகொண்டு பின்னர் பிரஜைகளைச் சிருஷ்டிசெய்ய முயல்வீராயின் நீங்களெண்ணிய காரியம் சித்தியாகும். இல்லாவிடில் அது எங்ஙனம் சித்தியாகும்? அது நிச்சயமென்று சொல்லவே, அவர்களெல்லாம் இந்த நாரத முனிவர் சொன்னது உண்மையே; இச்சமயத்தில் இவர் நேரிட்டது தெய்வாதீனமேயன்று ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டு

பூமியின் பிரமாணத்தைத் தெரிந்துகொண்டு பின்பு சுகமாய்ப் பிரஜைகளைச் சிருஷ்டிப்போமென்று நிச்சயித்து நாற்றிசையும் சிற்சிலராகப் பிரிந்து சென்றனர். இவர்கள் இவ்வாறு திசைக டோறுஞ் சென்றதைத் தக்ஷன் கேள்விப்பட்டு, அந்தோ ! இந்த நாரதனுல் பிள்ளைகளும் போயினர் ! அவர்களால் சிருஷ்டிக்கப் படும் சிருஷ்டியும் போயிற்றென்று மிகவும் மனம் வருந்தினவனுய் பின்னரொருவாறு தெளிந்து மீண்டும் எண்ணிறந்த பிள்ளைகளைப் படைத்து முன்போல் சிருஷ்டிப்பதற்கேவினுன். அவர்களுமப் படியே சிருஷ்டிப்பதற்கு முயலும்போது நாரதரும் முன்போல வந்து அந்தப் பிள்ளைகளை நோக்கி முன் அவர்களுக்குச் சொன்ன படியே சொல்ல, இவர்களும் அவர் வாக்கியத்தை நம்பித் திசை தோறும் போயினர். தக்ஷப்பிரஜாபதி அந்தப் பிள்ளைகளும் போய் விட்டதைக் கேள்வியுற்று சோகத்தோடு கோபங்கொண்டவனுய் நாரத முனிவரை நோக்கி, என் பிள்ளைகளை நீ நாசஞ்செய்த படியால் நீயும் நாசமாய்ப் போவதோடு கர்ப்பவாச துக்கத்தையும் அனுபவித்து எனக்கே மகனுகவும் வரக்கடவாயென்று சபித்தனன். ஓ அரசனே ! நாரதரைப் பற்றி வினவிய ஐயவினுக்களுக்கு விடை இப்போது சொல்லிவந்த சரித்திரத்தாலறியக் கடவாய். பின்ன ரந்தத் தக்ஷன் புத்திரசோகத்தினின்றும் ஒருவாறு நீங்கினவனுய் மறுபடியும் அறுபது கன்னிகைகளைப் பெற்று அவர்களில் பதின் மூவரை காசிபமுனிவருக்கும், பதின்மரை யமதருமனுக்கும், இருபத்தெழுவரைச் சந்திரனுக்கும், இருவரைப் பிருகு முனிவ ருக்கும், நால்வரை அரிஷ்டமுனிவருக்கும், அப்படியே நால்வரை அங்கீரசருக்கும் கொடுத்தனன். அவர்களுடைய புத்திரர்களாயும் பௌத்திரர்களாயும் உள்ளவர்கள்தான் தேவர்களுந் தானவர்களு மென்றறிவாய். ஓ அரசனே ! இவ்விருவகையினரும் பலவான்க ளாய் ஒருவருக்கொருவர் விரோதிகளாய் ராகத் துவேஷங்களை நாளுக்குநாள் விருத்தி செய்துகொண்டு அதனுல் அதிமோகிதர் களாயும் மாயாவிகளாயும் மிக்க சூரர்களாயு மிருக்கின்ரு ரென்றனர். (18–38)

ஓம் ஹ்ரீங்கார மந்த்ராயை நம:

## 2. சூரியவம்ச விஸ்தாரம்

சூதர் கூறுகின்ருர் :—ஜனமேஜயன் வியாச பகவானை நோக்கி, ஐயா ! தேவரீர் இப்போது சொல்லி வந்ததில் தக்ஷப் பிரஜாபதியினுடைய வம்சோற்பத்தி தெரியவந்தது ; இனிச் சூரியவம்சத்திற் ருேன்றிய அரசர்களுடைய வம்சமும் அவர் களுடைய சரித்திரமும் மிகப் பெரிதாதலால் அவற்றைச் சொல்லியருளு மென்றனன். வியாச முனிவர் கூறுகின்ருர் : ஓ அரசனே ! ஸரஸ்வதி நதி தீரத்தில் முன்பு நான், நாரத முனிவரை நோக்கி, இந்த ஏழாவது மனுவினுடைய குலத்தில் எந்த ராஜாக்கள் பிரசித்தி யடைந்திருந்தார்களோ அவர்களுடைய உற்

பத்தி விசேஷமானதென்றும், அதற்குச் சமானமான சரித்திரங் கிடையாதென்றும், அவர்களுடைய நடக்கை மிகவும் ஆச்சரியகர மானதென்றுங் கேள்வியுற்று, அதில் ஆவலுள்ளவனுயிருக்கிறேன்; ஆதலால் தேவரீர் அச்சூரிய வம்சத்தின் விஸ்தாரத்தைச் சொல்ல வேண்டுமென்றேன். அதற்கவர் மனமகிழ்ந்து என்னை நோக்கிப் புன்னகையுடன், ஓ சத்தியவதியின் புத்திரரே! நீர்கேட்க விரும்பிய அரசர்களுடைய வம்சாவளியைச் சொல்லுகிறேன், கேளும் என்றார். அதாவது பூர்வத்தில் பிரம்மன் தோன்றியவுடன் சிருஷ்டிக்கவேண்டு மென்கிற ஆவலுடையவனுய்ச் சிவசக்தியைத் தியானித்துப் பதினு யிரம் வருஷம் தவம்புரிந்து அவளருளால் சிருஷ்டி செய்யும் சக்தி யைப்பெற்று மானசிகமா யனேகம் புத்திரர்களை யுண்டாக்கினன். அவருள் மரீசி என்பவர் சிருஷ்டிப்பதில் பிரசித்தியடைந்தனர். அவரினுங் காசிபர் மிக்க பிரசித்திபெற்றனர். அவரிடத்திலிருந்தே சகலதேவாசுரர்களும் யக்ஷர்களுமுண்டாயினர். சர்ப்பங்களும் பசு பக்ஷிகளு முண்டாயின. தேவர்களுள் பிரசித்தி பெற்றவரான சூரியபகவானுக்கு வைவஸ்வத மனு வென்பவன் பிறந்தான். அவ னிடத்தில் இக்ஷ்வாகு, நாபாகன், திருஷ்டன், சரியாதி, நரிஷ்யந் தன், பிராம்சு, நகோதிஷ்டன், கருஷன், ப்ருஷத்ரன் என்னும் ஒன்பதின்மர் பிறந்தார்கள். இவர்களே மனுக்களென்று சொல்லப் பட்டவர். வைவஸ்வத மனுவினுடைய முதற்புத்திரனுகிய இக்ஷ்வாகு வுக்கு நூறு பிள்ளைகள் பிறந்தனர். அவருள் ஜேஷ்டனுன விகுக்ஷி என்பவன் ஆத்மஞான குணமுள்ளவனுயிருந்தனன். இரண்டா வது புத்திரனுகிய நாபாகனுக்கு அம்பரீஷனென்பவன் பிறந்தனன். அவன் பராக்கிரமசாலியாயும் தர்மஜ்ஞனுயும் பிரஜைகளைக் காப்ப தில் ஆவலுள்ளவனுயு மிருந்தனன். மூன்றுவது புத்திரராகிய திருஷ்டனுக்குத் தார்ஷ்டகன் என்பவன் பிறந்தான். அவன் பரப் பிரம்மஸ்வரூப தியானத்திலும் தவயோகத்திலும் ஆவலுள்ளவனு யும் யுத்தத்தையஞ்சுகின்றவனுயு மிருந்தனன். நான்காவது பிள்ளை யாகிய சரியாதிக்கு ஆனர்த்தன் என்னும் புத்திரனும் ரூபலா வண்ணியத்தோடுகூடின சுகன்னியென்கிற புத்திரியும் பிறந்தனர். சுகன்னி என்னும் புத்திரியை அந்தகனுன சவனனென்னு முனி வருக்குக் கொடுத்துவிட்டான். அம்முனிவன் அந்தகனுயினும் நல் லொழுக்கம் முதலிய குணவிசேஷங்களால் சூரியன் புத்திரர்களான அஶ்வினி தேவதைகளால் அழகான கண்களைப் பெற்றவனுயினு னென்றனர். (1–25)

இவ்வாறு சொல்லும்போது, ஜனமேஜயன் வியாச முனிவரை வினவுகின்றுன்: ஓ பிராமண சிரேஷ்டரே! தேவரீர் சொல்லிவந்த வம்சாவளியில் எனக்குண்டாகிய ஓர் சந்தேகத்தை யொழிக்க வேண்டும். அழகான கண்ணுள்ள புத்திரியைக் குருட்டு முனிவ னுக்கு அரசன் ஏன் கொடுத்தனன்? குரூபியாயும் குணமில்லாதவ ளாயும் ஸ்திரீ லக்ஷண மில்லாதவளாயும் இருக்கின்ற பெண்ணைக் குருடனுக்குக் கொடுத்தொழிக்கலாம். அதனுல் தோஷமில்லை. அந்த அரசன் அம்முனிவனைக் குருடனென்று நன்று யறிந்தவனு

யிருந்தும், அந்த அழகான பெண்ணை எப்படி அவனுக்குக் கொடுக்கத் துணிந்தான்? இதனைச் சொல்லுவீரென்று வினவினன். (26–30)

வியாசமுனிவர் கூறுகின்றார்: அப்பா! இந்த விசித்திரமான கதையைக் கேட்பாயாக. அந்தப் பெண்ணினுடைய தந்தையான சரியாதி என்னும் அரசனுக்கு நாலாயிரம் பத்தினிகள். அவர்களனைவரும் நல்ல ரூபமுள்ளவர்களாயும் நல்ல லக்ஷணமுள்ளவர்களாயும் அரசனிடத்தில் மிக்க பிரீதியுள்ளவராயுமிருந்தனர். அந்த நாலாயிரவருக்கும் பெண் குழந்தை இப்பெண்ணொருத்திதான். ஆனபடியினால் அப்பெண் தாய்மார்களுக்கும் தந்தைக்கும் அதிகமான பிரியமுடையவளாயிருந்தனள். இவள் செய்தி இங்ஙனமிருக்க, அந்த அரசனுடைய நகரத்துக்குச் சமீபத்தில் அன்னபக்ஷி முதலிய சிறந்த பக்ஷிகளால் சூழப்பெற்றதாயும் வண்டுகளாலொருபொழுது மொழியாது மொய்த்திருக்கும் மதுப் பெருக்கமுடைய தாமரை முதலிய மலர்கள் நிறைந்துள்ளதாயும் நாற்பக்கங்களிலும் தேவதாரு புன்னாகம் அசோகு முதலிய விருக்ஷ வகைகளால் அடர்ந்து சூரிய வெப்பத்தை யொழித்து எப்பொழுதுங் குளிர்ச்சியைச் செய்வதாயுமுள்ள ஓர் தடாகம் பிரம்மலோகத்திலுள்ள மானஸ சரசினுஞ் சிறந்திருந்தது. அதன் சிறப்பை இப்பொழுது என்னால் சொல்ல முடியாது. அத்தடாகத்தருகில் கோகிலங்களுடைய வொலிகளும் மயில்களுடைய சப்தங்களும் நீங்காதிருக்கப் பெற்றவோர் பொழிலுளது. அங்கோர் பரிசுத்தமானவிடத்தில் பார்க்கவரென்னும் ஓர் முனிவர் சாந்தராய் த்ருடாசனத்திலிருந்து மௌனியாய் வாயுபக்ஷணத்தையு மொழித்து இந்திரிய விஷய சம்பந்தங்களையு மகற்றித் தீர்த்தபானஞ் செய்வதையும் விட்டுப் பராசக்தியாகிய அம்பிகையைத் தியானித்துக்கொண்டு நிர்விகல்ப சமாதியுக்தராய்த் தவஞ் செய்திருந்தனர். அவரது திருமேனி கொடிசெடி முதலியவற்றால் சூழப்பெற்றுப் புற்றுருவமாய்விட்டது. இம் முனிவரிங்ஙனமிருக்க அப் பொழிலின்கண் சரியாதியரசன் தன்னுடைய ஸ்திரீகளோடு தன் பெண்ணையு மழைத்துக்கொண்டு வந்து அந்தத் தாமரை தடாகத்தில் தன்னுடைய பத்னிமார்களுடன் கிரீடித்துக்கொண்டிருந்தனன். அந்தச் சமயத்தில் அவனுடைய சுகன்னியென்னும் பெண் தோழிகளோடுகூடி அவ்வனத்துட்சென்று திரிந்து புஷ்பங்களைப் பறித்துக்கொண்டு புற்றுருவமாயிருக்கின்ற பார்க்கவ முனிவரிடம் வந்தனள். விளையாட்டிலாசையுள்ள அப்பெண் முனிவர் புற்றுருவமாயிருப்பதை யறியாதவளாய் இதுவென்ன புற்றென்றதிசயித்து அதன் சமீபத்திற்சென்று பார்க்கும்போது அப்புற்றின் சந்தில் மின் மினிப் பூச்சிபோலொரு சிறியவொளி தோன்றிற்று. இதுவென்ன மின்னுகின்றதேயென்று கூர்மையான முள்ளொன்றெடுத்துக் குத்தி அதைப் பார்த்துக்கொண்டிருந்தனள். அவ்வொளி அவரது கண்ணாதலால் அதிற்றைத்தது. தைக்கவே அவர் தமது யோகநிலை விட்டவராய் இச்செய்கை செய்தார் இங்கு யாவரென்றுபார்க்க, இப்பெண்ணைக் கண்டனர். அந்தோ! ஓ

பெண்ணே! நீ யேனிப்படிச் செய்கின்ருய்? புற்றைச் சிதைவு செய்யாது தூரமாய் ஓடிப்போய்விடென் றம்முனிவர் கூறவும் அச் சொல்லை இவள் நன்ருய்க் கவனியாமல் அவர் கண்ணை நன்ருய்க் குத்திவிட்டனள். பின்னர் முனிவரென்றுணர்ந்து அப்புறமோடிப் போய் நாமென்ன காரியஞ் செய்துவிட்டோம்! இதற்காக நமக் கென்ன தீங்கு வருமோவென்று சந்தேகித்திருந்தனள். (31–56)

இவளிங்ஙனமிருக்க, அவளால் குத்தப்பட்ட கண்ணுள்ள அந்த ரிஷி அதிக துன்பமுற்றவராய்க் கோபத்தோடுங்கூடி கண்ணோயினுல் மிகவும் பீடிக்கப்பட்டு மகா சங்கடத்தை யனுப விப்பாரயினர். அந்த க்ஷணத்திலேயே அரசனுக்கும் அவனுடைய மனைவிகள் முதலிய சகல பரிஜனங்களுக்கும் மலஜலங்கள் வெளி வராமல் பெருந்துன்பம் விளைந்தது. ஏனையோரைப் பார்க்கிலும் அரசனுக்கும் மந்திரிக்கும் அத்துன்பம் மேன்மேற் பெருகிற்று இரு வருந் துன்பப்பட்டிருக்குஞ் சமயத்தில் பத்னிமார்களும் பரிஜனங் களும் அவர்களிடம் வந்து தாங்கள் மலமூத்திரபந்தனையால் படும் பாட்டை அலறிக் கதறிக் கூறினுர்கள். அக் கூக்குரலைக் கேட்ட வரசன் இத்துக்கத்துக்குக் காரணம் யாதென்று சிந்தித்து இவ் விடத்திலுள்ள பெரியோர்கட்கு யாதோவொரு தீங்கு நேரிட்டிருக்க வேண்டு மென்ருலோசித்து யாவரையும் பார்த்து இவ்விடத்தில் யார்யார் எவ்வெவ்விதமான பாவங்களைச் செய்தீர்களென்று கேட்க, அவருட் சிலர் கூறுகின்றனர்: ஓ அரசனே! தடாகத்திற்கு மேற் பாகத்திலுள்ள வோர் பொழிலின் மத்தியில் மகாதபசியான பார்க்கவமுனிவர் தீக்ஷ்ணமான தவஞ்செய்துக்கொண்டிருக்கிருர். அக்னிபோல் ஜொலிக்கும் அம்முனிவரிடத்தில் எவனோ அபராதஞ் செய்து விட்டான். ஆதலால் நமக்கெல்லாம் இப்படிப்பட்ட சங்கட முண்டாயிற்று; இது நிச்சயம். தபோவிருத்தராயும் வயோவிருத்த ராயும் சிரேஷ்டராயுமிருக்கும் மகாத்மாவான அந்தரிஷிக்கு அப ராதஞ் செய்தவன் தெரிந்து செய்தானோ தெரியாமல் செய்தானோ அதன் பலன்தானிது. எந்தத்துஷ்டர்கள் அந்த ரிஷிக்கு விளையாட் டாக என்ன சங்கடத்தைச் செய்தார்களோ, அது தெரியவில்லை. இங்குள்ள நாங்களெல்லாம் அம்முனிவருக்கு மனத்திறுைம் வாக்கினுலும் சரீரத்தினுலுமோர் தீங்குஞ்செய்தோம் இல்லை என்றனர். (57–65)

ஓம் ஹ்ரீங்கார லக்ஷணுயை நம:

## 3. சுகன்னி-சவனர் திருமணம்

வியாச முனிவர் கூறுகின்ருர்:—ஓ ஜனமேஜயனே! சரியாதி என்னும் அரசன் சேனைகளுட்சிலர்சொல்லியவார்த்தைகளைக்கேட்டு மீண்டும் யாவரையும் நோக்கி நல்லவார்த்தைகளாலும் கோபத்தினு லும் உண்மை விளங்கக்கேட்டுக்கொண்டிருக்கும்பொழுது அவனது புத்திரியாகிய சுகன்னி பரிஜனங்களெல்லாம் மகா பாதைப்படுவதை யும் தந்தையார் வயிற்றுச் சூலையால் வருத்தப்படுவதையும் பார்த்து ஆலோசித்தவளாய் அரசனுகிய தந்தையிடம் வந்து, ஓ தந்தையே!

நானிந்தவனத்தில் விளையாடிக் கொண்டிருக்கும்போது கொடிகளாற் சூழப்பட்ட இரண்டு சந்துள்ள ஓர் புற்றைக் கண்டேன். அதில் மின்மினிப் பூச்சியைப்போல் பிரகாசிக்கு மிரண்டொளி கண்டு இதுவென்னவென் றறியலாமென்று முள்ளெடுத்துக் குத்திப் பிடுங்கிப் பார்க்கும்போது அம்முள் ஈரமாயிருந்ததுமன்றி அப்புற்றின் மத்தியிலிருந்து ஆஹாவென்று ஓர் சப்தமுண்டாயிற்று. என் தந்தையே! இதுவென்னவென்று சந்தேகித்து ஆச்சரியமடைந்தேனே யன்றி அந்தப் புற்றிலிருந்த ஜந்து இன்னதென்று தெரிந்துகொள்ளாமல் வந்துவிட்டேனென்று சொல்ல வரசன், அதிசீக்கிரமாய்ப் புற்றிருக்குமிடத்துக்கு வந்து அப்புற்றினிடத்தில் தபோவிருத்தரான முனிவரைப் பார்த்து, அந்தோ! அந்தோ!! என்றேங்கி அவரைச் சூழ்ந்திருந்த புற்றை யுடைத்துவிட்டு அவரை நோக்கி சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து மிக்க வணக்கத்துடன் கை கூப்பிக்கொண்டு, ஓ மஹானுபாவரே! இங்கு விளையாடிக்கொண்டிருந்த எனது பாலை அறியாத தன்மையால் குற்றத்தைத் தெரியாமற் செய்துவிட்டனள். ஓ பிரம்மசொரூபியே! அதைப் பொறுத்தருளல் வேண்டும். முனிவர்கள் கோபமில்லாதவர்களென்று யான் கேட்டிருக்கின்றேன். ஆதலால் நீர் மஹா முனிவராயிருக்கின்றபடியால், அதிபாலையான என் புத்திரி செய்த குற்றத்தை க்ஷமிக்க வேண்டும் என்று பிரார்த்தித்தனன். அம்முனிவர் அவ்வரசன் வார்த்தையைக் கேட்டு இரக்கமுள்ளவராய், வினயத்தோடும் துக்கத்தோடுங் கூடியிருக்கிற ஓ அரசனே! நானெப்பொழுதும் அணுமாத்திரமுங் கோபங் கொள்ளுவதில்லை. இப்போது நான் படும் இப்பாட்டிலும் நான் கோபங் கொள்ளவில்லை யென்பது நீயே தெரிந்துகொள்ளலாம். நான் உன் பெண்ணைச் சபித்தேனு? ஒரு குற்றமுஞ் செய்யாத நமக்கு இப்பாதையே னுண்டாயிற்றென்று அந்தப் பாவத்தையெண்ணி இப்போது நான் துக்கப்படுகின்றேன். ஓ அரசனே! நானுனது பெண்ணுக்குச் சாபமிடாவிடினும் நான் தேவி பக்தனுதலால் உங்களுக்குத் தீங்கு நேர்ந்தது. தேவி பக்தனிடத்தில் குற்றஞ் செய்தவர் சகல சுகத்தையுங் கொடுக்கத்தக்க சிவனைச் சரணமடைந்தாலுஞ் சுகமடையார். ஆகலான் உங்கள் வருத்தத்துக்கு நான் காரணனல்லன். ஓ அரசனே! கண்ணில்லாத கிழவனுகிய நான் என் செய்வேன்? அந்தகனுய்ப் போன வெனக்கு யார் பணிவிடை செய்வார் என்று வருந்தினர். அவரது மதுர மொழியைக் கேட்ட அரசன், ஓ முனிபுங்கவரே! நீர் நமக்கு யாருமில்லையே என்று துக்கிக்கவேண்டாம். நான் அநேக பரிசாரகர்களை உமக்கு வேண்டிய பணிகள் செய்ய நியமனஞ் செய்கிறேன். நீர் மாத்திரம் இச்சிறு பிழையைப் பொறுத்து எங்களுடைய துன்பத்தைப் போக்கவேண்டும் என்று பிரார்த்திக்க, அம்முனிவர், ஓ அரசனே! அநேக பரிசாரகர்களை நீ எனக்கு வைத்தாலும் நான் தவஞ்செய்ய வேண்டுமே! கண்ணில்லாம லெப்படிச் செய்வேன்? அன்றியும், உன்னுடைய சேவகர்கள் என்னுடைய இஷ்டத்தையறிந்து செய்வார்களா? அடிமையாட்களுக்கன்

புண்டாகுமா? ஓ அரசனே! நீ என்னைப் பொறுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்பதும் எனக்கு வேண்டிய சுகத்தைச் செய்ய வெண்ணியிருப்பது முண்மையானால் உனது அருமந்தச் செல்வி யாகிய புத்திரியை யெனக்குத் தருவாய். நானதனால் சந்தோஷ சித்தனாய்த் திருப்தியடைந்து தவஞ் செய்வேன். அவளெனக்குச் செய்யவேண்டிய பணிகளைக் காலமறிந்து செய்வாள். நான் சொல்லியபடி நீ யாலோசித்துச் செய்யும்பக்ஷத்தில் நானுஞ் சந் தோஷத்தையடைவேன்; நீயுஞ் சேனைகளுடன் சந்தோஷமடை வாய். இதிற் கொஞ்சமேனும் தாங்கள் சந்தேகங் கொள்ளாது உனது கன்னிகையைத் தானஞ் செய்வையாயின் அவளுக்கு உலகில் யாதொரு குறையும் தூஷணமுமுண்டாகமாட்டா வென்று சொல்லவும், அரசன் சிந்தாகுலனாய் கொடுக்கமாட்டேனென்றும் கொடுக்கிறேனென்றுஞ் சொல்லாமல் குருடராயும் கிழவராயும் குரூபியாயுமிருக்கும் இம்முனிவருக்கு தேவகன்னிகை போலிருக் கும் நமது பெண்ணைக் கொடுத்து நாமெப்படிச் சுகமடைவோம்? நம்முடைய பெண்ணை இம்முனிவருக்குக் கொடுப்பது நம்முடைய சுகத்தை யுத்தேசித்தேயன்றி அவளுடைய சுகத்தை யுத்தேசித் தல்லவே! தன் சுகத்திற்காக புத்திரியின் ஸம்ஸார சுகத்தை எந்தப் பாவிதான் கெடுப்பான்? எந்த அறிவிலிதானிவ்வா றெண்ணுவான்? அந்தகராயும் விருத்தராயுமிருக்கும் இம்முனி வருக்கு நாமும் கொடுக்கத் துணிந்து அவளும் இவரைப் பர்த்தா வாக வடைவதற் கிசைவாளாயின், பின்னர் காமன்பாணத்தால் பீடிக்க வருங்காலத்தில் காலத்தை எப்படிக் கழிப்பாள்? பர்த்தா வென்று இவரை வைத்துக்கொண்டு யௌவன காலத்தில் காமத்தை யனுபவிப்பதற் கில்லாமற் போமாயின், அதனையொழிக்க இவ ளால் முடியுமா? அக்காலத்திலதனை யனுபவித்துப் பின்னரொழிக்க வேண்டுமானா லறிவாலொழிக்கலாம். அந்தோ! நம் பெண் கண்ணில்லாத கிழவரைக் கணவனாகப் பெறுவாளாயின் யௌவன காலத்தில் விளையுங் காமத்தை யெவ்வாறு களையவல்லவளாவள்? பூர்வத்தில் விருத்தராகிய கௌதம முனிவரைக் கணவராகக் கொண்ட அகலிகையானவள் யௌவன காலத்திலல்லவா இந்திரனால் வஞ்சிக்கப்பட்டு வஞ்சனைக்குள்ளாய் அவனால் காமசுகத்தை யனுப வித்தாள். அச்சுகத்தைக் கௌதமரால் அனுபவித்திருப்பாளாயின் அவ்விந்திரனுடைய வஞ்சனைக்குட்படுவாளா? பின்னர் கிழவராகிய கௌதமர் அச்செயலையறிந்து அவரைச் சபித்தனர். அந்தோ! அவர் சாபங் கொடுப்பதில் வல்லவராயினரேயன்றிக் காமசுகங் கொடுக்க வல்லவராயினரில்லையன்றோ? அப்படித்தானே இவர் கதியு மாம் என்றெண்ணி, நாமிப் பெண்ணை இவருக்குக் கொடுக்கப் போகாது நமக்கு வந்திருக்கும் துன்பத்தை நாமே யனுபவிப்போ மென்று நிச்சயித்துக்கொண்டு அம்முனிவருக்கொன்றுஞ் சொல் லாமல் தன்னரண்மனை போய்ச்சேர்ந்து மந்திரிகள் யாவரையு மழைத்து மகா துக்கத்துடன் அவர்களைப் பார்த்து, ஓ மந்திரி களே! நானிப்பொழுது என்ன செய்வேன்? நீங்கள் சொல்லுங்கள்;

அம்முனிவருக்குப் புத்திரியைக் கொடுத்துவிடவா? அல்லது இந்தத் துக்கத்தை யனுபவிக்கவா? இவற்றை நீங்களனைவரும் ஒன்று சேர்ந்து யோசித்து எது நன்மையோ அதனைச் சொல்லுங்கள் என்றரசன் கூற, மந்திரிகள், ஓ மகாராஜனே! இந்த மகா சங்கடத்துக்கு என்னவாலோசனை செய்து எதைச் சொல்லுவோம் என்று மயங்கியிருக்கும்போது அந்தச் சுகன்னி யென்பவள் தந்தை சிந்தையோடு கூடியிருப்பதையும், மந்திரிகள் யாதொன்றும் சிந்திப்பதற் கில்லாமலிருப்பதையும் பார்த்து தந்தையின் சமீபத்தில் வந்து சிரித்துக்கொண்டே, ஓ தந்தையே! எனக்காக வன்றோ நீரிப்பொழுது விசனப்படுகிறீர்? விசனப்படவேண்டாம்; என்னல் கண்ணேயடைந்திருக்கிற முனிவரிடம் நான்போய் அவருக்காளாகவிருந்து அவரைச் சமாதானப்படுத்திச் சந்தோஷமுண்டாக்கி உங்களெல்லோருடைய கவலையுமொழிக்கின்றேன்; நீங்களெல்லோருஞ் சுகமாயிருங்கள் என்று கூறவே, அரசன் அவளது அறிவிற்கு வியந்து, ஓ குழந்தாய்! காட்டில் கண் குருடாயிருக்கின்ற அக்கிழவரைப் பெரியோரென்றெண்ணி நீ பணி செய்தால் மனதுக்கு யாதொரு துன்பமுமில்லை. கணவராகக் கொண்டு பணிவிடை செய்தால் அது துன்பந் தராமற் போமா? நீ அக்கிழவருக்கு எங்களுடைய துன்பத்தைக் கருதி பணிவிடை செய்கின்றேனென்று துணிந்து போவதற்குப் புறப்பட்டாலும் ரதிபோன்றவுனக்கு அவராலென்ன சுகங் கிடைக்குமென்று நான் துணிந்திருப்பேன்? தந்தையானவன் தன் பெண்ணைச் சரீரத்திலிருக்கவேண்டிய யௌவனபலம் பந்துபலம் தனபலம் தானியபலம் முதலியவற்றையுடைய புருஷனுக்குக் கொடுக்கவேண்டுமேயன்றி இவையொன்றுமில்லாத தரித்திரனுக்குக் கொடுக்கலாமா? ஓ என் செல்வியே! உனது சௌந்தர்ய மெங்கே, காட்டிற்றிரியுமக் கிழவ ரெங்கே! அவ்வந்தகக் கிழவருக்குத் தாமரை மலர்போலும் மலர்ந்திருக்குங் கண்ணைப் படைத்திருக்குமுன்னைக் கொடுத்து உன்னைத் துன்பப் படுத்துவதைப் பார்க்கிலும் நானுமென்னுடைய பரிஜனங்களுந் துன்புற்று மரணமடைவது சுகம். இதனுலெனக்குப் பாவமில்லை. உன்னை அக்கிழவருக்குக் கொடுப்பேனுனல் அப்போதே யெனக்குப் பாவம் வருமென்பதிற் சந்தேகமில்லை. ஆகையால் என்னுயிரினுஞ் சிறந்த மகளே! இனி நீ எவ்வளவு சொன்னுலும் அக்குருடருக்குன்னை நான் கொடுக்கமாட்டேன். எனக்கு வந்திருக்குந் துன்பத்தைப்பற்றி நான் தைரியத்தை விடேன். நீ என்னிடத்திலேயே ஸ்திரமாயிருப்பாய். இதனுல் இந்தத் தேகமும் ராஜ்யமுமிருந்தாலு மிருக்கட்டும், போனுலும் போகட்டும். ஓ குழந்தாய்! அவ்வந்தகர்க்கு நானுன்னைக் கொடுப்பதில்லை. இது நிச்சயம் என்றுன். (1–45)

அவன் வார்த்தையைக் கேட்ட சுகன்னி தன் தந்தையைப் பார்த்து நகைத்து, ஓ அப்பா! நீர் இவ்வாறு சொல்வது உமக்கடுத்ததன்று; நான் சொல்வதைக் கேட்பீராக. என் விஷயத்திற் சிந்தனை கொள்ளவேண்டாம். என் நிமித்தமாய் எல்லா ஜனங்களும்

சுகமடைய என்னை இப்பொழுதே முனிவரிடம் கொண்டுபோம். நான் பக்தியோடு அம்மஹா பரிசுத்தரான முனிவருக்கு வேண்டிய பணிகளைச் செய்து அவருக்குச் சந்தோஷத்தை வருவித்து அதனை நான் கண்டு மகிழ்வதாகிய இன்பத்தை யனுபவிக்கத் துணிந்திருக்கின்றேன். அவரிருக்குமிடமோ யாருமில்லாத அரண்யம். அவரோ கிழவர். நானோ வாலிபப் பருவமுடையவள். இப்பொழுது நான் கற்புநிலைமையைக் காப்பாற்றிக் கொள்வதற்கான முயற்சியைத் தேடிக்கொள்வேனேயன்றி கற்புநிலைமையைக் கெடுத்துக்கொள்வதற்கான முயற்சியைச் செய்வேனென்று ஒருபோதும் நீர் நினையாதொழிவீர். என் மனமானது அற்ப சுகவிஷயங்களில் அலையாது சுகமாகவிருக்கும் என்றனள். அதிதீரத்துடன் அவள் சொல்லிய வார்த்தையை மந்திரிகளும் அரசனுங்கேட் டாச்சரியமு மடைந்து அப்பெண்ணை அப்போதே அழைத்துக்கொண்டு முனிவரிடம்போய் தலைவணங்கி அவரைநோக்கி, ஓ பிரபுவே ! தேவரீர் சொல்லியபடி என்னுடைய பெண்ணை உமக்குத் தத்தஞ் செய்கிறேன் ; வாங்கிக் கொள்ளும் என்று அப்பெண்ணை வேண்டிய ஸ்ரீதனங்களுடன் விவாகஞ்செய்து கொடுத்தான். சவனமுனிவர் கன்னிகையை மாத்திரம் அங்கீகரித்துக்கொண்டு சந்துஷ்டராய் ஏனைய ஸ்ரீதனங்களை அங்கீகாரஞ்செய்யாது அரசனுக்கு ஆசிபுகன்றனர். அக்கணமே சேனைகளுக்கெல்லாம் தேகோபாதி நீங்கிச் சுகமுண்டாக, அதனை அரசன் கண்டு மிக மகிழ்வெய்தி முனிவரிடம் விடைபெற்றெழுந்தனன். அப்போது அவனது புத்திரி, ஓ அண்ணா ! என்னுடைய வஸ்திரங்களையும் பூஷணங்களையும் வாங்கிக்கொள்ளும். நான் முனிவருக்குரித்தாகிய மரவுரியும் கிருஷ்ணாஜினத்தையுந்தரித்து முனிபத்னியாவேன் ; இந்தப் பர்த்தாவை நான் மோசஞ் செய்யேன். அவருக்கு வேண்டிய இதத்தையே செய்வேன். எனது காமசுகத்தை எண்ணாது கற்பினால் வருஞ் சுகத்தையே எப்பொழுதும் நீங்காத சுகமென் றெண்ணுவேன். எனது கற்புநிலைமையால் முனிவருக்குப் புகழ்வருவதே யன்றி உமக்கும் மூன்றுலகத்திலும் பெரும் புகழுண்டாகும். அந்தகரான கிழவருக்கு அழகான வயதுள்ள நமது பெண்ணைக் கொடுத்துவிட்டோமே, இவள் நல்லொழுக்கத்தைக் காப்பாற்றுவாளோ, காப்பாற்ற மாட்டாளோவெனச் சிந்திக்க வேண்டாம். அருந்ததி வசிஷ்டருக்கு எப்படி தருமபத்னியாயின்றும் உலகில் தம்பதிகளுக்குக் கலியாண காலத்தில் காட்டுமாறு இருக்கின்றாளோ அவ்வாறு நானும் முனிவருக்கிருப்பேன். அனசூயை அத்திரி முனிவருக்குப் பத்தினியா யெப்படி பதிவிரதை யென்று பிரசித்தி பெற்றாளோ அப்படிநான் பிர்சித்தி பெற்று சுகமாயிருப்பேன்; நீர் போய்வாருமென்றாள். அரசன் அவள் வேண்டியவாறே மரவுரியையுங் கிருஷ்ணாஜினத்தையுங் கொடுக்க, அவள் வாங்கித் தரித்துக்கொண்டு அணிந்திருக்கும் வஸ்திராபரணங்களை அரசனிடங் கொடுத்து விட்டாள். அவளது தவக் கோலத்தைக் கண்ட அரசன் பேதமைத்தன்மையால் கண்ணீர்விட்டழ, ஏனைய மந்திரிகளும் அழுதழுது அறிவற்ற பாவைபோல் யாதொரு தெளிவு

மில்லாமலசைவற்றிருந்தனர். அப்பெண் யாவரையுந் தேற்றி அவரவர்களுக்குச் சொல்லவேண்டியபடி சொல்லி விடை கொடுத்தனள். அரசன் முதலிய யாவரும் விடைபெற்றுத் தெய்வத்தை நாடி நகரம்போய்ச் சேர்ந்தனர். (46–64)

ஓம் ஹ்ரீங்காரஜப ஸுப்ரீதாயை நம:

## 4. சுகன்னியும் அஶ்வினி தேவரும்

வியாசப்பகவான் ஜனமேஜயனை நோக்கிக் கூறுகின்றார்:— சுகன்னியினுடைய கற்பிலக்கணத்தை நானென்னவென்று சொல்லப் போகிறேன்! சரியாதி மகாராஜன் போனபின் அந்தச் சுகன்னி அந்தக்கிழவராகிய தனது கணவனுக்குச் செய்யவேண்டிய பணிவிடைகளெல்லாஞ் சாஸ்திர விதிப்படி தன் மனதிலெண்ணி அப்படியே செய்வதில் ஆவலுள்ளவளாய்த் தன் கணவன் எழுந்திருக்குமுன் தானெழுந்திருந்து சௌசத்துக்கு வேண்டிய மண்ணையும், சௌசபாத்திரத்தில் ஜலமுமெடுத்துக்கொண்டு கணவனைத் தனது கைகொடுத்துத் தூரத்திற் கொண்டுபோய்விட்டுத் தான் அவருக்கு மறைவாகத் தூரத்தினின்றிருந்து அவர் சௌசம் செய்துகொண்ட பின்னர் அவரைப் பிடித்துக்கொண்டு மெல்ல மெல்ல நடத்தி ஆச்சிரமத்திற்கு அழைத்து வந்து சுகமான ஆசனத்தி லிருக்கச் செய்து பாதங்களைக் கழுவ சுத்தமான மண்போட்டு சுத்தமான ஜலத்தினால் விதிப்படி தானே அலம்பி ஆசமனஞ் செய்வித்து சாஸ்திரோக்தமான தந்தகாஷ்டங் (பற்களை விளக்குங்கொம்பு) கொடுத்துத் தந்ததாவனஞ் செய்துகொள்ளும்படிச் சொல்லிப் பின்னரவரைத் தந்தசுத்தி யாயிற்றாவென்று கேட்டுப் பரிசுத்தமான உஷ்ண ஜலத்தைக் கொண்டுவந்து வைத்து, பிரபுவே! வென்னீர் கொண்டுவந்து வைத்திருக்கிறேன்; அதனை மந்திரபூர்வகமாய்ச் சுத்திசெய்து ஸ்நானஞ்செய்யலாமே என்று சொல்லி, அவர் ஸ்நானஞ் செய்த பின்னர் சந்தியாகாலம் வந்துவிட்டது; இனி பிராதஸ்ஸந்தி செய்யலாமென்பாள். அவ்வநுஷ்டானங்களெல்லாம் முடிந்தபின்னர் தேவபூஜை செய்யலாமென்று சொல்லி அதற்கு வேண்டிய உபகரணங்களெல்லாங் கொண்டுவந்து வைத்து விதி பிசகாமல் அதனை நடத்தி வைப்பாள். அது முடிந்தபின்னர் அக்னிகாரியத்தை நடத்தி வைப்பாள். அது முடிந்தபின்னர் இனிமையான பழங்களையும் நானாவிதமான கிழங்குகளையுஞ் செந்நெல்லன்னத்தையுங் கொடுத்துண்பிப்பாள். உண்டபின்னர் கைகால்களை யலம்பி ஆசமனதீர்த்தங் கொடுத்து ஆசமனஞ்செய்யச் செய்வாள். பின்னர் மான்தோல் புலித்தோல் முதலிய ஆசனங்களிற் சற்றிருக்கச்செய்வாள். பின்னர் கைகால்களைப் பிடித்துறங்கச்செய்வாள். அவருறங்கிய பின்னர், தன் சரீரத்துக்குச் சாதனமான கனிவகைகளைப் புசித்து அதிசீக்கிரமாகக் கணவனிடம்

வந்து அவருறங்கி யெழுந்திருப்பதைப் பார்த்து மிக்கவன்புடன் சமீபத்திலிருந்து, ஓ பிரபுவே! இப்போது என்னசெய்ய வேண்டுமோ அதனைச் சொல்லுமென்று வினயத்துடன் கேட்டுப் பாதங்களைப் பிடிப்பிக்க விரும்பினுல் அப்படிச் செய்வாள். அக்காலத்தில் சிவசரித்திரங்களையும் பதிவிரதா தருமங்களையுங் கேட்பாள். பின்னர் மாலையில் செய்யவேண்டிய ஹோமம்முதலியவைகளை முடிக்கச் செய்து மிருதுவாயும் ருசியாயுமுள்ள பழவர்க்கங்களைக் கொடுத்து அதனதன் சுவை ருசிகளைச் சொல்லி யுண்பிப்பாள். பின்னரவருடைய உத்தரவினுல் மிகுந்த பழங்களைத் தானுண்டு அவருக்குச் சுகமான படுக்கையை விரித்து உறங்கச் செய்து அவருறங்குமளவும் பாதங்களைப் பிடித்திருந்து அவரது பாதத்தடியில் தான் நித்திரை செய்வாள். இதுவுமன்றி கிரீஷ்மகாலத்தில் அவருக்கு வெப்பந்தீர விசிறியினுல் குளிர்ச்சியை யுண்டாக்குவாள். ஏமந்தகாலத்தில் அவரெதிரில் கட்டைகளைக் கொளுத்தி அவரைச் சமீபத்திலிருக்கச்செய்து சுகமாயிருக்கிறதா, சுகமாயிருக்கிறதாவென்று அடிக்கடி கேட்பாள். இவ்வாறு அக்கன்னிகை முனிவரைக் கணவனுகவடைந்து பிரீதியோடும் கிரமத்தோடும் தினம் பணிவிடை செய்வதோடு கிருகஸ்தாஶ்ரமத்துக்குரிய அக்னிபூஜையும் அதிதிபூஜையும் விதிப்படி நடத்திவருவாள். (1–25)

சிலகாலங் கழிந்தபின்னர், சூரியன் புத்திரர்களான அஶ்வினிதேவதைகள் விளையாடிக்கொண்டே அச்சவன முனிவருடைய ஆஶ்ரமத்துக்கு வந்தார்கள். அச்சமயத்தில் இக்கற்புடைய மாது சிரோமணி நீராடி ஆச்சிரமத்தை நோக்கிப்போக, அந்த அஶ்வினிதேவதைகள் சமீபத்தில் வந்து மோகமடைந்தவர்களாய், மத்தயானையைப்போல் நடக்கிற உத்தமமான ஓ ஸ்திரீயே! நாங்கள் சூரியனுடைய புத்திரர்கள். தேவகன்னிகையாயிருக்கின்ற உன்னைப்பார்க்க வந்தோம். நீ யாருடைய பெண்? உன் பர்த்தா யார்? இத்தடாகத்தில் நீ நீராடுவதற்குச் சகாயமின்றி எப்படிவந்தாய்? இரண்டாவது லக்ஷ்மிபோல் பிரகாசிக்கின்ற நீ இன்னுளென்பதை அறிய விரும்புகின்றோம்; உண்மையைக் கூறுவாய். மிருதுவான உன் பாதங்கள் இவ்வனத்தில் நடக்கும்படிச் செய்த தெய்வத்தைப்பற்றி எங்கள் மனதில் துக்கமுண்டாகின்றது. மெல்லிய சரீரமுள்ள நீ விமானத்திலேறிக்கொண்டு போகத்தக்கவளாயிருக்க யாதுகாரணத்தால் காலினுல் கீழே நடக்கிருய்? மேலே போர்வையில்லாமல் இக்காட்டில் ஏன் திரிகிருய்? நீ சகிகளையுடையவளாயிருக்க வேண்டுமே! அவர்கள் உனக்குச் சிச்ரூஷை செய்யாமலிருப்பதற்குக் காரணமென்னை? நீ ராஜஸ்திரீயா? அப்ஸரஸ்திரீயா? உண்மையைக் கூறுவாய். உன்னுடைய பாக்கியத்தையும் உன்னைப்பெற்ற தாய் தந்தையர்களுடைய புண்ணியத்தையும் உன் கணவனுடைய பாக்கியத்தையும் நாங்கள் சொல்லுவதற்குச் சமர்த்தரல்லர். ஓ அழகான கண்ணுள்ள பெண்ணே! உனது கால்நிலவப்பெற்ற இப்பூமி தெய்வலோகத்திலு மதிகப் பெருமையுள்ளது. உனது கால் நடையினுல் இப்பூமி பரிசுத்தமாய்விட்டது. உன்னுடைய பேரழகைக்

காட்டிலிருக்கும் மிருகங்களும் பக்ஷிகள் முதலிய சகல ஜந்துக்களும் கண்டு உன்னையே பார்க்கின்றன. நாங்களுன்னை அதிகமாய் ஸ்தோத்திரஞ் செய்ததுபோதும். நீ உன்னுடைய உண்மையைக் கூறுவாய். உன்னுடைய தகப்பனுர் யார்? உன்னுடைய புருஷன் யார்? அவர்களைப் பார்க்க எங்களுக்கு அதிக ஆசையா யிருக்கிறது என்றனர். ஓ அரசனே! இவ்வாறு அவ்விருவருங் கூறிய வார்த்தைகளை அவள் கேட்டு நாணமுடையவளாய், ஓ அஸ்வினி தேவதைகளே! என்னைச் சரியாதியின் புத்திரியாகவும் அவ்வரசனுல் சவனமுனிவருக்கு மனைவியாகக் கொடுக்கப்பட்டவளாகவும் பதிவிரதா தருமத்தில் தவருதவளாகவும் தெரிந்து கொள்ளுங்கள். ஆனுல் எனது பர்த்தா தபசியாயும் விருத்தராயும் குருடராயுமிருப்பதால் இரவும் பகலும் அவருடைய சிஸ்ருஷை செய்து கொண்டிருக்கிறேன். நீங்கள் யார்? எதற்காக நீங்களிங்கு வந்தீர்கள்? நீங்கள் புண்ணிய சாலிகளாகக் காணப்படுகின்றபடியால் எனது பர்த்தாவினுடைய ஆஸ்ரமத்திற்குவர மனம்விரும்புகின்றது. வந்தால் அவ்வாச்சிரமம் பரிசுத்தமடையும் என்ருள்.
(25–42)

அவ்வார்த்தையைக் கேட்ட அஸ்வினி தேவதைகள் கூறுகின்றனர்: ஓ சுந்தரியே! உன் தந்தை அக்கிழவருக்கு உன்னை என்ன காரணத்தினுல் கொடுத்தனரோ அதனைச் சொல்வாய். இவ்விருளடர்ந்த காட்டில் மேகத்திற் காணப்படும்மின்னல்போல் பிரகாசிக்கின்ற உனக்குச் சமானமான ஸ்திரீதேவதையை நாங்கள் பார்த்ததேயில்லை. நீ திவ்யமான ஆபரணத்திற்கும் வஸ்திரத்திற்குந் தகுந்தவளேயன்றி மான்தோலைத் தரித்துக்கொண்டு வெற்றுடம்பா யிருத்தற்குத் தகுந்தவளில்லை. உன்னை இவ்வனத்தில் குருடனுயும் கிழவனுயும் இருக்கிறவனுக்குப் பத்தினியாக்கி அவனுக்கு வேண்டிய வேலையைச் செய்யச் செய்து வருத்தப்படுத்தும் தெய்வத்தின் சேஷ்டையை நாங்கள் என்னென்று சொல்லுவோம்! நர்த்தனஞ் செய்வதுபோலும் நடக்கும் நடை கற்ற பண்டிதையாகிய நீ இக்கிழவனைக் கணவனுகக் கொண்டு யௌவனத்தைப் பிரகாசிக்காமற் செய்துவிட்டனையே! இனி மன்மதனுல் விடப்படுவனவாகிய பாணங்கள் உன்மேற் படுமா, குருடனுயுங் கிழவனுயும் இருக்கின்ற அவன்மேற் படுமா? அதனை நீயே யோசித்துப் பார்ப்பாய். கிழவன் மேற் பாணம் படப்போகிறதுமில்லை; அவன் வருத்தப்படப் போகிறதுமில்லை. உன்மேற்படும் பாணங்கட்கு நீ என் செய்யப் போகின்ருய்? அது உன்மேற்படா தொழியுமானுல் நீ துன்பப்படா தொழிவை. யௌவனமுடைய உனக்கு விருத்தனுகிய குருடனைப் பர்த்தாவாக்கி மேன்மேலும் துன்பம் பெருகச் செய்த அந்தப் பிரம்மாவின் புத்தி விசாலத்தை நாங்களென்னவென்று சொல்லுவோம்! காட்டில் வசிப்பதும் கிருஷ்ணுஜினத்தைத் தரிப்பதும் உனக்குத் தகுதியன்றென்று இக்கிழவனை விடுவையாயின் இவ்வேஷமுமுன்னை விட்டோடிப்போம். ஆதலால் எங்களிருவரில் ஒருவனைச் சாவதானமாக ஆலோசித்துப் பர்த்தாவாகச் செய்து கொள்வாய்.

பாக்கியஹீனனும் போஷணை ரக்ஷணையென்னு மிரண்டும் நீ செய்ய வேண்டியவனும் இருக்கிற முனியை விடுவதற்கு என்ன யோசனை யிருக்கிறது? நாங்கள் சொல்லியபடி எங்களிரு வரில் ஒருவனைப் பர்த்தாவாக நீ கொள்ளுகிற பக்ஷத்தில், நந்தன வனத்திலும் சைத்திரத வனத்திலும் வேடிக்கையாய் விளையாடலாம். இந்தக் குருட்டுக் கிழவனோடு உனக்கென்ன விளையாட்டிருக்கிறது? ஒருநாள் முழுவதும் கிரீடா விநோதத்துக் கிடமில்லாமல் வேலை செய்வது ஏனைய ஸ்திரீகளுக்குச் சொன்னாலுஞ் சொல்லலாம், ராஜபுத்திரியா யிருக்கின்ற நீ வேலை செய்து தொலைக்கவேண்டிய காரணமென்ன? ஆனால் நீ ராஜக்கிரீடையோடு ஸம்ஸாரக்கிரீடை களையு மறிந்திருக்கிறாய்; இது ஆச்சரியமே. இந்த மானிட சஞ்சார மில்லாத காட்டில் யாதொரு பாக்கியானுபவமும் இல்லாமல் காலத்தை எப்படிக் கழிப்பா யென்பதை யெண்ணினால் கவலை யுண்டாகின்றது என்றனர்.

அச்வினி தேவதைகள் இவ்வண்ணம் கிழவனாகிய முனிவனைப் போகத்துக்குரிய னல்லனென்று பலமுறை இழிவுறையால் இகழ்ந்தும், போகத்துக்குரியவர்கள் நாங்களே யென்று தங்களைப் புகழ்ந்து கொண்டாடிக் கூவியும் தங்களெண்ணத்தை வெளிப் படுத்தி வந்தனர். (43–56)

ஓம் ஹ்ரீம்மத்யை நம:

## 5. சவனர் யௌவனம் பெறுதல்

வியாசர் கூறுகின்றார்:—ஓ ஜனமேஜயனே! பர்த்தாவை நிந்தித்துக் கூறும் அவளுடைய வார்த்தையை ராஜபுத்திரிகேட்டு நடுங்கிப் பின்னர் தைரியம்பண்ணிக்கொண்டு, ஓ தேவர்களே! சூரிய மூர்த்தியினுடைய புத்திரர்களாயும் தேவர்களால் புகழத்தக்கவர் களாயும் எல்லாமறிந்தவர்களாயும் இருக்கின்ற நீங்கள் நல்லொழுக்கமாகிய இல்லொழுக்கத்திலுள்ள என் விஷயத்தில் இப்படிச் சொல்லத் தகுந்தவர்களல்லராயிருந்தும் சொல்ல வந்தது ஆச்சரியமே! ஓ தேவ சிரேஷ்டர்களே! மஹா யோகியா யிருக்கிற முனிவருக்கு என் தந்தையாரால் தத்தஞ் செய்யப்பட்டவளா யிருக்கும் நான் விபசாரிகள்போல் இப்போது காம விருப்பத்தால் வேறொரு புருஷனைத் தேடிக்கொள்வேனா? உலகில் அவரவர்கள் செய்யுங் கர்மங்களுக்குச் சாக்ஷியாய் நாடோறுந் தோன்றிவரும் சூரியபகவானுடைய புத்திரர்கள் நீவிரென்பது பொய்யோ? மெய்யாயின் என்னை விபசார கர்மத்திற் செல்லத் தூண்டுவீர்களா? அஸாரமான இந்தச் சம்ஸாரத்தில் விதித்திருக்கும் தருமத்தை விட்டால் ஸாரம் யாது? தருமமொன்றே ஸம்ஸாரத்திலுள்ள ஸாரம். நீங்கள் வந்தவழியே நாடிப் போகலாம். போகாது நின்று முன்போல ஏதேனும் புகல்வீராயின், நான் ராஜபுத்திரியா யிருப்பதால் க்ஷாத்திரமும் எனது கணவனிடத்தில் பக்தியுள்ளவளாக இருப்பதால் தெய்வபலமுமுள்ளேனாதலால் உங்களுக்குச் சாபம் புகல்வேன். அதனை ஏற்க விருப்பமுளதேல் நிற்கலாம் என்றாள். (1–6)

சுகன்னியின் வீரமொழியைக் கேட்ட அச்வினி தேவதைகள் ஆச்சரியமும் பயமுமுடையவர்களாய் அவளைப் பார்த்து, ஓ உத்தம ஸ்திரீயே! உனது பதிவிரதா தருமத்தினால் மிகவும் சந்தோஷ மடைந்தோம். இனி நீ எங்களிடத்தில் வேண்டியவற்றைக் கேட்க லாம். நாங்கள் தேவ வைத்தியர்களாதலால் உனது கணவரைக் கண்ணுடையவராகவும் எங்களைப்போல் அழகுள்ளவராகவும் ஆக்கு கின்றோம். ஆனால் அவருடன் நாங்களும் சேர்ந்து மூவராய் உன் னெதிரில் நிற்போம். அப்போது மூவரில் உனது கணவருக்கு மாலையிட்டு வரித்துக்கொள்வாய் என்றனர். அவர்கள் வார்த்தை யைக் கேட்ட சுகன்னி தன் புருஷனுக்கு நல்ல சரீரமுண்டாவதில் சந்தோஷ முடையவளாயினும் பின் சொல்லிய ஓர் சூளால் சிறிது கலக்கமடைந்தவளாய்த் தனது நாயகனிடத்திற் சென்று, அச் வினி தேவதைகளைக் கண்டது முதல் நடந்த செய்திகளையும் இறு தியில் தனக்குண்டான கவலையையுங் கூறி, இது தேவ மாயையா யிருப்பதால் தேவரீரது கட்டளையின்படி செய்ய சித்தமாக இருக் கின்றேன் என்றனள். முனிவரும் அவ்வார்த்தைகளைக் கேட்டு, ஓ பதிவிரதா சிரோமணியே! நீ ஒன்றற்கும் அஞ்சற்க; அவர்களை யழைத்துக்கொண்டுவா; அவர்களிஷ்டபடி செய்வோம்; நீ ஒன் றுக்கும் ஆலோசனை செய்யவேண்டாம்; போய் வா என்றனர்.

சுகன்னி, சவன முனிவரிடத்தில் விடைபெற்று, அச்வினி தேவதைகள்பாற் சென்று, நீங்கள் சொல்லியவாறே செய்யலாம், வாருங்கள் என்றழைத்தனள். அவர்களும் அம்முனிவர்பாற் சென்று அவரைக் கண்ணுற்றுச் சுகன்னியைப் பார்த்து, உனது நாயகராகிய இவர் நல்ல திவ்ய ரூபத்தை யடைவதற்கு இந்தத் தீர்த் தத்தில் மூழ்கவேண்டும் என்று அவ்விடத்திலுள்ள தீர்த்தத்தைக் காட்ட, அம்முனிவர் அந்தக்ஷணமே அதில் மூழ்கினர். அவர்களும் மூழ்கினர். பின்னர் மூவரும் சமமான பருவமுள்ளவர்களாய்த்திவ்ய மான காந்தியுடன் திவ்யகுண்டலதாரிகளாய் வெளியே வந்துநின்று சுகன்னியைப் பார்த்து, ஓ சுந்தரியே! எங்கள் மூவரில் உனக்கு யாரிடத்தில் அதிகப் பிரீதி தோன்றுகிறதோ, அவரை நீ பர்த்தா வாக வரித்துக்கொள்ளலாம் என்றனர். அவள் உருவத்திலும் அழகி லும் வயதிலும் கண்டத்வனியிலும் பூஷணாதி யலங்காரங்களிலும் மூவரும் சமானமாய்க் காணப்படுகின்றபடியால் நாம் யாரைக் கணவராகக் கண்டு மாலையிடுவது? நம்மிடத்தில் வந்தவர்கள் தேவ வைத்தியர்களல்லவா? அவர்கள் எல்லா மாயையும் செய்ய வல்ல வர்கள்தானே! நாம் எந்த மாயையைக் கண்டோம்? இப்போது இந்திரஜால வித்தையைக் காட்டி விட்டார்களே! என்று பலவா யெண்ணி மனங்கலங்கி, நாம் கணவரை யறிவதற்கில்லாமை யால் நமக்கிப்போது வந்தது மரணமேயன்றி வேறில்லை யென்று தேவியைத் தோத்திரஞ் செய்யத் தொடங்கினள்:—　(7–30)

ஓ லோகமாதாவே! துக்கத்துக்காளாயிருக்கும் யான் உன்னைச் சரணமாகவடைந்தேன். எனது பதிவிரதா தருமத்தைக் காத்தருள் வாய். ஓ மஹாலக்ஷ்மியே! சங்கரார்த்தாங்க சரீரியே! ஓ விஷ்

ணுப்பிரியே ! ஓ மஹாஸரஸ்வதியே ! அறிவிலிகளுக்கு அறிவையும் அறிவுடையாராகிய ஞானிகளுக்கு மோக்ஷ சுகத்தையுங்கொடுக்கின்றவளே ! மூலப்பிரகிருதியும் நீயே! பரம புருஷனும் நீயே! நற்குண முடையார்க்குப் போக சுகத்தையும் தீக்குணமுடையார்க்கு துக்க பயத்தையுந் தருகின்றவளே! யோகிகளுக்குச் சித்திகளையும் வெற்றிகளையும் கீர்த்திகளையும் தருகின்ற நினது ஆச்சரியச் செயலைக் கண்டு உன்னைச் சரணமடைந்தேன். ஓ மாதாவே ! என் பர்த்தாவைக்காட்டுவாய். நான் பர்த்தாவைக் காணுமல் துயரக்கடலில் மூழ்கியிருக்கின்றேன். என்னைத் தேவவைத்தியர்கள் வஞ்சித்து விட்டனர். நான் யாரைப் பர்த்தாவாகக் கொள்வேன் ? ஓ எல்லாமறிந்த தாயே ! என் பதிவிரதா தருமத்தையறிந்து எனக்குப் பர்த்தாவைக் காட்டுவாய் என்று பிரார்த்தித்தனள். திரிபுரசுந்தரியாகிய மஹா தேவி அவளது பதிவிரதா தருமத்துக் கிரங்கினவளாய், அவளுடைய புத்திக்குத் தனது கணவனை யறியும்படியான சக்தியைக் கொடுத்தனள். சுகன்னியானவள் அதனை யறிந்தவளாய் மகிழ்ந்து தேவியை உள்ளத்துள்ளே பணிந்து போற்றி நின்று மூவருள் தனது நாயகனுகிய சவன முனிவருக்கே மாலையிட்டு வரித்துக் கொண்டனள். (31–40)

அஶ்வினி தேவதைகள் அவளது அருஞ்செயலைக் கண்டு பதிவிரதா தருமத்தை வியந்து அவளை ஆசீர்வதித்து, தேவியினது கருணையாதலால் இதற்கு நாம் சந்தோஷிக்க வேண்டியதென்று ஆனந்தமுற்று, நாங்கள் போய்வருகிறோமென்று முனிவர்பால் விடை கேட்ப, அம்முனிவர் அவர்களை நோக்கி, ஓ மஹா வைத்தியர்களாகிய அஶ்வினி தேவதைகளே ! நான் பதிவிரதா தருமத்திற் சிறந்த பத்னியைப் பெற்று நாடோறுந் துன்பத்தையே அனுபவித்து வந்தேன். அப்படியிருந்த வெனக்கு இன்பமுண்டாக என்னிடத்தில் இருந்த கிழத்தனத்தையும், குருட்டுத் தனத்தையும் போக்கி உங்களிடத்திலுள்ள யௌவனத்தையும் கண்ணொளியையும் அற்புதமான ஓர் சௌந்தரியத்தையும் தந்தீர்கள். இவ்வரிய செயலுக்கு நான் ஏதேனும் பிரதியுபகாரம் உங்கட்குச் செய்யாதொழிவேனுயின் எனக்கு நன்றி மறத்தலாகிய ஓர் துரோகமும் உலகத்திற் பழியும் உண்டாகும். அன்றியும் நான் உங்களுக்குக் கடன்காரனுமாய் விடுவேன். ஆதலால் அஃதெனக் குண்டாகாமலிருக்க உங்களுக்கு வேண்டியவற்றைக் கொடுக்க இச்சிக்கிறேன். உங்களால் விரும்பப்படுவதாகிய அப்பொருள் தேவர்களாலும் அசுரர்களாலும் அடைவதற் கரிதானதாயினும் அதனை நான் கொடுக்கச் சித்தமாயிருக்கிறேன். நீங்கள் செய்த இந்த நல்லுபகாரத்திற்கு யான் செய்யப்போவது அவ்வளவரிதானதன்று. ஆதலால் விரைவில் உங்கள் மனதிலிருக்கிற கோரிக்கையைச் சொல்லுங்கள் என்று கூறினர். அவ்விருவர்களும் அம் முனிவருடைய வார்த்தையைக் கேட்டு ஒருவருக்கொருவர் ஆலோசனை செய்து முனிவரை நோக்கி, ஓ முனிஶ்ரேஷ்டரே ! எங்களுடைய தந்தையாரனுக்கிரகத்தால் நாங்கள் வேண்டிய இஷ்ட சித்தியைப் பெற்ற

வர்களா யிருந்தபோதிலும் ஓர் குறையுளது. அஃதாவது, எங்களுக்குத் தேவர்களுடன் சமமாய்ச் சோமபானங்கிடையாது. அஃதுண்டாக நாங்கள் அபேக்ஷித்திருக்கின்றேம். ஏனெனில் பூர்வத்தில் மேரு பர்வதத்தில் நடந்த ஓர் பிரம்மயாகத்தில் இந்திரன், வைத்தியர்களோடு சோமபானஞ் செய்யக்கூடாதென்று எங்களைத் தடுத்துவிட, நாங்கள் தடைப்பட்டு நின்றுவிட்டோம். நீர் தரும மறிந்தவராதலால் அந்தச் செய்தியை நன்றாய் அறிந்துகொண்டு எங்களுக்குச் சோமபானஞ் செய்விக்கச் சக்தியுள்ளவரா யிருப்பீராயின் எங்களுக்கிஷ்டமான அந்தக் காரியத்தைச் செய்துவையும். இதுதான் நீர் எங்கட்குச் செய்யும் பிரதியுபகாரம் என்றனர். முனிவர் அவர்களது மிருதுவான வார்த்தையைக் கேட்டு, ஓ வைத்தியர்களே ! நான் சரியாதி மகாராஜனுடைய யாகத்தில் இந்திரன் பார்த்துக்கொண்டிருக்கும்போதே உங்களைச் சோமபானம் செய்விக்கிறேன். இது சத்தியம் என்று அவர்களுக்கு விடைகொடுத்தனர் ; அவர்களும் தங்களிடம் போய்ச் சேர்ந்தனர். சவன மகாமுனிவரும் சுகன்னியை யழைத்துக்கொண்டு தன் னாச்ரமம் வந்து சேர்ந்தனர். (41–59)

ஓம் ஹ்ரீம் விபூஷணுயை நம :

## 6. சரியாதி செய்த யாகம்

ஜனமேஜயன் வினவுகின்றான்: சவனமாமுனிவர் தேவவைத்தியர்களுக்குத் தாம் சொல்லியபடி சோமபானத்தை முன்னே தடைசெய்த இந்திரன் தடைசெய்யாவண்ணங் காத்து அவர்களுக் குண்மையாய் நிறைவேற்றினரா ? இந்திரனது பலத்திற்குமுன் மனிதரான முனிவருடைய பலம் எம்மாத்திரம் ? இவரால் அக்காரியம் சாதிக்கப்பட்டதென்றால் அது ஆச்சரியமல்லவா ? ஆதலாலதனைச் சொல்லவேண்டும் எனப் பிரார்த்தித்தனன். வியாசமுனிவர் கூறுகின்றார் : ஓ மஹாராஜனே ! சவனமகாமுனிவர் யாகத்தை நடத்திய அற்புத சரித்திரத்தைச் சொல்லுகிறேன், கேட்பாயாக.

அம்முனிவர் சுகன்னியுடன் இந்திரன் இந்திராணியோடு கூடி கிரீடித்திருப்பதுபோல் கிரீடித்துச் சுகமாய் வாழ்ந்து வரும் நாளில், இம்முனிவர் பத்னியின் தாய், தனது பர்த்தாவை நோக்கி மெய் நடுங்கிக் கண்ணீர்விட்டழுதுகொண்டே, ஓ பிரபுவே ! உம்முடைய பெண்ணைக் குருடரான முனிவருக்குக் கொடுத்துக் காட்டில் விட்டு வந்தீரே ! அவளிறந்து போயினளோ, அல்லது உயிரோடிருக்கின்றனளோ போய்ப் பார்த்து வரலாகாதா ? என் மகளாகிய அந்த சுகன்னி தானே வேண்டுமென்று அந்த முனிவரைப் பர்த்தாவாகக் கொண்டனள். அவளிப்போது என்னசெய்து கொண்டிருக்கிறாளோ ? பெண்ணினுடைய துக்கம் என் மனதில் கொளுத்திக் கொண்டிருக்கிறதே. காட்டில் தவசிகளைப்போல் தவசியா யிளைத் திருக்கிற என் பெண்ணை யழைத்து வாரும். அந்தகனை

பர்த்தாவைப்போல் தவசியா யிளைத்திருக்கும் என் பெண்ணை யழைத்து வாரும். அந்தகனுன பர்த்தாவைப்போல் மரவுரி உடுத்திக்கொண்டு எல்லா ஆபரணங்களையு மிழந்தனளே! அவளை நான் பார்க்கவேண்டும் என்று புலம்பும்பொழுது, அரசன் அவளை நோக்கி, ஓ பெண்ணே! ஏன் புலம்புகின்றனை? புலம்புவதனுற் பயனென்? நம்முடைய பெண்ணையும் அந்த முனியையும் பார்க்க இப்போது நாமிருவரும் போவோம் என்று சொல்லித் தேரின்மீது ஏறிக்கொண்டு சவனமகாமுனிவரின் ஆஶ்ரமம் வந்து சேர்ந்து, அங்கு புதிய யௌவனத்தோடு தேவ புத்திரன்போல் பிரகாசிக்கின்ற முனிவரைப் பார்த்து ஆச்சரியமடைந்து நமது பெண் உலகமெல்லாம் நிந்திக்கத்தக்க காரியத்தைச் செய்து விட்டாளே என்று சிந்தித்து, இந்தப் பெண் அந்தக் குருட்டு முனிவரைக் கொன்று விட்டு காம பீடிதையாய் வேருெருவனை தனக்கு இஷ்ட பர்த்தாவாகச் செய்துகொண்டாள் போலும்! அந்தோ! வெட்கம்! மன்மதனும் சகிக்காதவனல்லவோ? மேலும் யௌவனகாலத்திற்கு ஆரம்பகாலமாகிய இப்பருவத்தில் அவன் ஜயிக்கத்தக்கவனுவனு? இந்தப் பெண் நம்முடைய குலத்திற்குப் பெரிய பாவத்தை யுண்டு பண்ணி விட்டனளே! எவனுடைய பெண் துர்நடத்தை யுள்ளவளா யிருக்கின்றுளோ அவன் பிழைப்பைச் சுடவேண்டும்! ஸர்வ பாவங்களாலும் பிராணிகளுக்குத் துக்கமுண்டாவதற்காகவே பெண் பிறக்கிருள். நம்முடைய காரியத்திற்காக நாமே அனுசிதமான காரியத்தைச் செய்துவிட்டோம். குருடனுயுங் கிழவனுயுமிருக்கிறவனுக்குப் பெண்ணைக் கொடுத்தோமே; இதைப் பார்க்கிலும் அனுசிதமென்ன விருக்கிறது? தகப்பன் பெண்ணைத் தகுந்த யோக்யனுக்குக் கொடுக்கவேண்டு மல்லவா? நாமென்ன வேலை செய்தோம்? நமக்கென்ன பழிவந்தது? இப்படிப்பட்ட துர்நடத்தை யுள்ள பெண்ணைக் கொல்வோமாளுல் ஸ்திரீஹத்தி என்கிற பாதகம் நேரிடும். மேலும் பெண்ணைக் கொல்வது இன்னும் விசேஷமான பாவத்துக்குக் காரணமாகுமன்றோ? பிரசித்தமான நம்முடைய வம்சத்தைப் பாவத்துக்குள்ளாக்ச் செய்து வைத்தோமே! இனி நம்முடைய பெண்ணினிடத்தில் சிநேகஞ் செய்வோமாளுல் லோகாபவாதம் இன்னும் அதிகமாய் விளையுமன்ருே? என்ன செய்வோம் என்று சிந்தா சமுத்திரத்தில் மூழ்கியிருந்தனன். தற்செயலாய் அவ்வாஶ்ரமத்தி லுலாவிக்கொண்டிருக்கும் சுகன்னி, தன் பிதாவைப் பார்த்து வேகமாயோடி வந்து மிக்க பிரீதியுடன் வார்த்தையாட வாரம்பித்து, அவன் முகத்தைப் பார்த்தனள். அவனவளைப் பாராது முகத்தைத் தொங்கவிட்டு ஆகுலப்பட்டிருக்க, ஓ தந்தையே! என்ன ஆலோசனை செய்கிறீர்? நீர் முகத்தைத் தொங்கவிட்டிருக்குங் காரணமென்னை? ஓ புருஷ சிரேஷ்டரே! வாரும், வாரும், என்னுடைய பர்த்தா நல்ல வயதுள்ளவராயும் தாமரைபோல் மலர்ந்த கண்ணுடையவராயும் பிரகாசித்துக் கொண்டிருக்கிருர். அவரைப்பார்த்து மகிழ்ந்து நமஸ்காரஞ் செய்யும் என்றனள். தனது புத்திரி கூறும் வார்த்தையைக் கேட்டுச்

சரியாதி மகாராஜன் கோபங்கொண்டு புத்திரியை நோக்கிக் கூறுகின்ருன் : பெண்ணே ! தபசியான அந்தக் குருட்டுமுனிவர் எங்கே ? மதத்திருக்கிற இந்த யுவாவான புருஷன் யார் ? எனக்குப் பெரிய சந்தேக முண்டாயிருக்கிறது. ஓ பாபிஷ்டையே ! முனிவரைக்கொன்று விட்டனேயா ? காமத்தினுல் குலத்தையெல்லாம் நாசஞ்செய்ய வந்த நீ வேருெருவனைப் பர்த்தாவாகச்செய்து கொண்டனேயா ? இந்த தவசிரேஷ்டரின் புனிதமான ஆச்சிரமத்தில் இருக்கவேண்டிய எனது மருகராகிய முனிவரைக் காணுமலிருக்கிறேனல்லவா ? வியபிசாரி செய்யும் பாவத்தை நீ செய்துவிட்டனேயல்லவா ? ஓ துர்நடத்தையுள்ளவளே ? முனிவரைக் காணுமல் இந்த யௌவன புருஷனைக் கண்டு துக்க சமுத்திரத்தில் மூழ்கிப்போய் விட்டேனே யென்று தந்தை சொல்லும்பொழுது, அந்தப்பெண் சிரித்துக் கொண்டே தந்தையைக் கையிற் பிடித்துக்கொண்டு பர்த்தா விடத்தில் கொண்டுபோய்விட்டுக் கூறுகின்ருள் : இவரைத்தானே நீர் கண்டு எண்ணுததெல்லாமெண்ணி என்னை வெறுத்தீர். ஓ தந்தையே ! இவர்தான் உமது மருகரான சவன மகாமுனிவர் ; அதிற் சந்தேகமில்லே. அஸ்வினி தேவதைகள் கருணையினுல் இந்த அழகையும் யௌவனத்தையும் கண்ணையுந் தந்துப்போயினர். அவர்களால் இவ்வாறு நடக்கப்பெற்றது தெய்வத்தின் செயலென் றெண்ணக்கடவீர். உமது பெண்ணுன நான் நீரெண்ணியபடி அப்பாவத்தைச் செய்தவளல்லள். நீரிந்த ரூபத்தைப் பார்த்துச் சந்தேகமடைகிறீர். அதனை அம்மகாமுனியை நமஸ்கரித்துக் கேட்பீராயின் பிறகு அவரே நான் சொல்லிய காரணத்தை விஸ்தார மாகச் சொல்லுவரென்று சொல்ல, ஒருவாறு நம்பிக்கையுண்டாய்ப் புத்திரியின் வார்த்தைப்படி முனிவரை நமஸ்கரித்துப் பிரீதியோடு கேட்கத் தொடங்கினுன் : (1–36)

ஓ பார்க்கவமுனிவரே ! உமக்கு எப்படி இக்கண்கள் வந்தன ? உம்முடைய கிழத்தனம் எப்படிப் போயிற்று ? இவ்விருத்தாந் தத்தைத் தகுந்தபடி சொல்லும். ஓ முனிவரே ! அழகு மிகுந் திருக்கும் உம்மைக் காணவே வருத்தத்தோடு கூடின சம்சயம் எனக்குண்டாயிற்று. ஓ பிராம்மண சிரேஷ்டரே ! நீரொன்றையும் ஒளிக்காமற் சொல்வீராயின் நானதனைக் கேட்டுச் சம்சயம் தெளிந்து சுகத்தையடைவே னென்றனன். சவனமுனிவர் கூறுகின்ருர் : தேவ வைத்தியர்களாகிய அஸ்வினி தேவதைகள் தெய்வகதியாக இவ்விடம் வர அவர்களை யுனதுபெண் தனது பதிவிரதா தருமத்தால் வென்று என்னிடம் அழைத்துவந்து என்னைக்காட்ட அவர்கள் என்னைப்பார்த்துக் கூறியபடி நான் நீரில் மூழ்கி யெழுந்திருக்கும்போது இவ்வரியவடிவத்தைப் பெறலாயினே னென்று நடந்த வரலாறெல்லாம் விடாமற் சொல்லிப் பின்னர், ஓ அரசனே ! நான் அவர்களுக்குக் கைமாருக ஓர் வரங்கொடுத்திருக் கின்றேன் ; அஃதென்னை யெனின், உம்முடைய யாகத்தில் அவர் கட்குச் சோமபானஞ் செய்விக்கிறேனென்று சொன்னேன். அவர்களுடைய சகாயத்தால் நானிப்போது நல்ல கண்களையும்

நல்ல யௌவனத்தையுமடைந்து சுகமாயிருக்கிறேன். இனி உம் மனக்கவலையை விட்டு ஆசனத்தில் நன்ருயுட்காருமென்று சொல்லவே, அரசன் தன் மனைவியோடு சமீபத்திலுட்கார்ந்து பெண்ணையும் பிள்ளையையும் பார்த்து அதுகாறுமடைந்திருந்த கவலையெல்லா மொழியப்பெற்று ஆவலுடன் சந்தோஷசித்தர்களாய் மகாத்மாவான முனிவரோடு சுகமான சில கதைகளைச் சொல்லிக் கொண்டிருக்க, முனிவரும் அரசனை மிகவுஞ் சந்தோஷப்படுத்தி, நீர் சோமயாகஞ் செய்யவேண்டும்; அந்த யாகத்தை நான் செய்விக்கிறேன். ஆகலான் அதற்கு வேண்டிய திரவியங்களைச் சேர்ப்பியும். நான் பிரதிக்ஞை செய்துகொடுத்தபடி இருவரையும் யாகத்தில் சோமபானஞ் செய்விக்கிறேன். நீர் நிச்சயமாய் செய்ய வேண்டும். அவர்களிடத்தில் கோபமுடையவனு யிருக்கிற இந்திரனை எனது தேஜோபலத்தினுல் தடைசெய்து விடுகிறேன்; இதிற் சந்தேகமில்லை யென்றனர். அரசன் அதைக்கேட்டு மகா சந்தோஷமடைந்து அப்படியே செய்வோமென்று அங்கீகரித்து அவரைக் கொண்டாடித் தன் மனைவியுடன் தன் பட்டணத்திற்குப் பிரயாணப்பட்டு முனிவரையும் விட்டுப்போவதற்கு மனமில்லாமல் அவரது கையைப் பற்றிக்கொண்டு சாவதானமாய்ப் பேசிக் கொண்டே வீடுபோய்ச் சேர்ந்தான். சின்னுள் கழித்து ஓர் சுப தினத்தில் ஸர்வைச்வரியமுள்ள சரியாதி மகாராஜன் யாகசாலை யேற்படுத்திப் பூஜ்யர்களான வசிஷ்டர் முதலிய முனிவர்களை வரவழைத்துச் சவன மகாமுனிவரால் யாகஞ்செய்யத் தொடங்கினுன். அந்தப் பெரிய யாகத்தில் இந்திரன் முதலிய சகலமான தேவர்களும் வந்துசேர்ந்தனர். அச்வினி தேவதைகளும் சோம பானஞ் செய்வதற்காக வந்துசேர்ந்தனர். இந்திரனே அச்வினி தேவதைகளாகிய இருவரையும் பார்த்துச் சந்தேகப்பட்டு, இவர்கள் எதற்காக இங்கு வந்தார்களென்று எல்லாத் தேவர்களையும் பார்த்து, வைத்தியஞ் செய்கிறவர்கள் சோமபானஞ் செய்யத்தகாதவர்களல்லவா? யாரிவ்விடமிவர்களை வரவழைத்தார்கள்? நீங்களேதேனுமறிவீர்களாவென்று கேட்டான். அவர்களெல்லோரும் காரணத்தைச் சொல்லாதிருந்தனர். பிறகு சவன மகாமுனிவர் அச்வினி தேவதைகளிருவருக்கும் பாகம்பிரித்துச் சோமரஸத்தை யெடுத்தார். இந்திரன், இவர்களுக்குப் பாகம் கொடுக்கவேண்டியதில்லை; இவர்களிதற்குத் தகுந்தவர்களல்லவென்று தடைசெய்தான். செய்யவே, ஏனிவர்கள் சோமபானஞ் செய்யத்தகுந்தவர்களாகார்? அந்தக் காரணத்தை யுண்மையாகச் சொல்வாய். ஓ தேவசிரேஷ்டனே! இவர்கள் வைப்பாட்டிக்குப் பிறந்தவர்களல்லவே? சாக்ஷாத் சூரியனுடைய தர்மபத்னிக்குப் பிறந்தவர்களல்லவா? இவர்களை நீ ஏன் தடைசெய்கிருய்? எந்தத் தோஷத்தினுல் சோமபானத்துக்குத் தகுந்தவர்களல்லவென்கிருய்? அதனை எல்லாத் தேவர்களுஞ் சேர்ந்து நிச்சயஞ்செய்யவேண்டும். நானவர்களிருவரையும் சோமபானஞ்செய்விக்கவே எனது மாமனுகிய அரசனைத் தூண்டி இந்த யாகத்தை நடத்திவைக்கிறேன். இப்போது நான் சொல்லும்

வார்த்தை யுண்மையானது. ஓ இந்திரனே! எனக்கிவர்கள் புதி தான யௌவனத்தைக் கொடுத்து எனக்குபகாரஞ் செய்தார்கள். ஆதலால் நான் அவர்களுக்குப் பிரதியுபகாரஞ் செய்யவேண்டும்; என்ன சொல்லுகிருயென்றுகேட்க, இந்திரன் அவ்விருவரையும் தேவர்களெல்லோரும் வைத்தியர்களாகச் செய்து கொண்டபடியால் அவ்விருவரும் சோமபானஞ்செய்யத்தக்கவரல்லர்; இவர்களுக் குப் பாகங்கொடுக்க வேண்டாமென்றனன். சவனமகாமுனிவர், அடா! ரிஷிபத்தினியைப் பிடித்திழுத்தவனே! வீணுன கோபத்தை விட்டுவிடு. சத்தியவாதிகளான அஸ்வினிதேவதைகள் வைத்திய ரானதால் எப்படிச் சோமபானத்துக்குத் தகுந்தவர்களாகார்? விருத்திராசுரனுன பிராம்மணனை யாகத்தில் வஞ்சனையாற் கொன்றனையல்லவா? உன் தொழிலைநோக்க இவர்கள் தொழில் மிக்க குறைவானதோ வென்றதி வுக்கிரங்கொண்டு சொல்லுவதைக் கண்டு ஒருவரும் பதில் சொல்லாதொழிந்தனர். தீக்ஷ்ணமான தேஜஸுள்ள அம்முனிவர் தமது தபோபலத்தினுல் அவர்களுக்குச் சோமபானம் கொடுக்கத் தொடங்கினுர். (37–61)

ஓம் ஹ்ரீம் ஸீலாயை நம:

## 7. சவனர் தவத்தின் வெற்றி

வியாசர் கூறுகின்ருர்:—ஓ ஜனமேஜயனே! சவனமுனிவர் இந்திரனை யொருபொருளாக மதியாது அஸ்வினிதேவதைகளுடைய பாகத்தைக் கையிலெடுக்கவே, இந்திரன்மகாகோபங்கொண்டவனுய் தன்பலத்தைக் காண்பிக்கிறவன்போல் முனிவரைநோக்கி, ஓ பாபிஷ்ட பிராம்மணனே! நீ மரியாதையைத் தாண்டக்கூடாது; சத்துருவானவுன்னை நான் வேருெரு விருத்திராசுரனைக் கொன்றது போலக் கொன்றுவிடுகிறேனென்ருன். அதுகேட்ட முனிவர், உருவத்தினுலும் பொருளினுலும் தேஜஸினுலும் என்னை வேருெரு தேவனைப்போலாக்கிய அவர்களை நீ அவமானப்படுத்தவெண்ணற்க. நீயொழிந்த ஏனைய தேவர்களெல்லாம் பாகம் வாங்கிக்கொள்ளச் சித்தமாயிருக்கிருர்கள். அஸ்வினிதேவதைகள் உனக்கிளைத்தவர் களல்லர். உன்னிலும் மகா பராக்கிரமசாலிகளென்றறிவாய். ஓ இந்திரா! வைத்தியர்கள் யஜ்ஞத்தில் சோபமானத்துக்குத் தகுந்த வர்களல்லரென்பதை நீ யெங்கே கண்டனை? ஓ மூடபுத்தி யுள்ள வனே! நீ கொடுக்கக்கூடாதென்றெண்ணுவையாயின் உன் தலையை இப்பொழுது அறுத்து விடுகிறேனென்றுசொல்லி, அந்த இந்திர னுடைய வார்த்தையைக் கேட்பதொழிந்து, அவ்விருவருக்கும் சோமபான பாகத்தை எடுத்துக் கொடுக்க முயலும்போது அந்தப் பாகத்தை அவ்விருவரும் வாங்கிக்கொள்ளப் பிரயத்தனப்பட்டனர். (1–4)

இந்திரன் பார்த்து, ஓ முனியே! இப்போது இவர்களுக்குச் சோமபாகம் கொடுப்பையேயானுல் விருத்திராசுரனைப்போல்

2192—45

உன்னை வஜ்ராயுதத்தால் கொன்றுவிடுவேனென்று சொல்ல, அதனை யவர் ஓர் வார்த்தையாகவெண்ணிப் பயப்படாது அதிக கோபத்தோடும் அகங்காரத்தோடும் அவ்விருவர்களுக்குஞ் சோம பானத்தைக் கொடுத்தார். உடனே இந்திரனும் அதிக கோபங் கொண்டு வஜ்ராயுதத்தை யவர்மேலெறிந்தனன். கோடிசூரியர்போல் பிரகாசித்துக் கொண்டுவரும் வஜ்ராயுதத்தைச் சர்வதேவர்களும் பார்த்துக்கொண்டிருக்கும்போதே முனிவர் தமது தபோபலத்தினல் சலிக்கவொட்டாது நிற்கச்செய்து யாகாக்னியில் ஆபிசாரமந்திரத் தால் இந்திரனைக் கொல்வதற்கு ஓமஞ்செய்தனர். செய்யவே அவரது தபோபலத்தால் அவ்வோமகுண்டத்தினின்றும் ஓர் அசுரன் மகா பலமுள்ளவனும் மகா குரூரனும் மகா கோரரூபனும் மகாபயங்கரமான கரிய பெரிய சரீரமுள்ளவனும், பிராணிகளுக் கெல்லாம் பயத்தைக் கொடுக்கிறவனும் பர்வதாகாரமான தீக்ஷ ணத்தோடுங் கூடிய பத்துகாத நீளமுள்ள பற்களுள்ளவனும் நூறு நூறு யோசனையுள்ள நான்கு கோரப்பற்களை யுடையவனும் விந்தியமலைபோல் நீண்டோங்கிய புஜங்களையுடையவனும் ஆகா சத்தை நக்கிக்கொண்டிருக்கிற நாக்குள்ளவனும் பர்வத சிகரம் போல் கடினமான கண்டமுடையவனும் புலிநகம் போன்ற நக முள்ளவனும் பயங்கரமான தலைமயிரும் முகமும் உள்ளவனும் காட்டுத் தீபோல் கொதித்தெரியும் நேத்திரமுள்ளவனும் மத னென்கிற பெயருடன் தோன்றினன். அந்த அசுரனை அமரரனை வரும் பார்த்துப் பயமடைந்தனர். இந்திரன் பயந்தவனுய் யுத்த முயற்சியைவிட்டு இவனென் செய்வானே வென்று ஏங்கி நின்றனன். (5–20)

அந்த அசுரனே வஜ்ராயுதம் வருமானல் அதனை வாயில் கடித்துக்கொண்டு மூன்று லோகத்தையும் விழுங்கி விடுகிறவன் போல் சற்றுறுத்துப் பார்த்து நின்று பின்ன ரடங்காக் கோபங் கொண்டு இந்திரனைப் பக்ஷிக்கப் போகிறேனென்று துரத்திக் கொண்டுபோயினன். அதுகண்ட தேவர்களெல்லாம் ஓடிப்போய் விட்டோம், ஓடிப்போய்விட்டோ மென்றழுதார்கள். அவன்பேரில் வஜ்ராயுதத்தை விடவேண்டுமென்று எண்ணங் கொண்டிருந்த இந்திரன் கையாடாமல் அதனை விடுவதற்கு அசக்தனுய் ஓடுவதற்கு மில்லாமல் போர்புரிவதற்குமில்லாமல் திகைத்துத் தனது குருவைத் தியானித்தனன். தியானித்த மாத்திரத்தில், அவரெதிரே வந்து, இந்திரனுக்கு நேரிட்டிருக்கும் மகத்தான ஆபத்தைப் பார்த்து, மனதினல் செய்யவேண்டிய காரியத்தை நிச்சயஞ் செய்துகொண்டு, அவனை நோக்கி, ஓ இந்திரா ! இவ்வசுரன் ரிஷியினுடைய மஹா தபோபலத்தினல் பிறந்த மகாபலசாலியாகலான் இவன் உன்னுலும் உனது வஜ்ராயுதத்தாலும் என்னுலும் மந்திரங்களாலும் தேவர் களாலும் ஜயிக்கத் தக்கவனல்லன். ஓ தேவஸ்ரேஷ்டனே ! நீயொன்றும் யோசியாமல் சவன மஹாமுனிவரைச் சரணமடை வாய். அம்முனிவர் தன்னல் உண்டுபண்ணப்பட்ட இவனைத் தடைசெய்துவிடுவார். சக்தியானது சக்தனுடைய பௌருஷத்தைத்

கின்ருன். ஆலயத்துக்கு விமானதானஞ் செய்கின்றவன் பரம பதத்தையடைந்து ஒரு மன்வந்தரம் வாழ்கின்ருன். சித்திரமமைந் துள்ள விமானதானஞ் செய்கின்றவன் நான்கு பங்கதிகமாயும், சிவிகை தானஞ் செய்தால் அதிற்பாதியும், டோலிதானஞ் செய்தால் நூறு மன்வந்தரமும் வாழ்வான். பகவான் உலாப்போதற்குரிய வீதியை மாளிகைகளோடு இருக்கச்செய்கின்றவன் பதினுயிரம் வருஷம் இந்திரலோகத்திலிருப்பான். எவரெவர் எந்தெந்தச் சுகத்தை விரும்புகின்ருர்களோ அவரவர் அதற்குரிய திரவியங் களைப் பிராமணர்களையாவது தேவர்களையாவது உத்தேசித்துத் தானங்கள் செய்வாராயின் அந்தந்தச் சுகத்தை யடைகின்றனர் ; செய்யாதவரடையார். அஃதாவது எந்தப்பொருள் வேண்டுமோ, அந்தப்பொருளைத் தானங்கொடுத்தால்தான் அப்பொருள் கொடுத்த வனுக்கு வருமென்பதாம். சுவர்க்காதி சுகங்களை யனுபவித்தவன் மீண்டும் பாரத வருஷத்தில் பிராம்மணனுகவே பிறந்து வீட்டு நெறிகூட முயலுவான் ; முயலானுயின் மீண்டுஞ் சுவர்க்கத்தை யடையப் போவான். க்ஷத்திரியர் முதலானவர்களும் பிரம்மசித்தி வேண்டுமானுல் பிராம்மணராகவே பிறத்தல் வேண்டும் ; அப் பிறப்பும் கூடுதல் அரிது. அது ஜன்மாந்தரங்களிற் செய்த புண்ணிய பலத்தால் வரத்தக்கது. ஓ பதிவிரதையே ! இதுவரையில் யான் சொல்லி வந்ததால் புண்ணிய பாவங்கள் இரண்டென்றும், அந்தக் கர்மாக்கள்தான் அவரவர்களுக்குச் சுகதுக்கங்களைக் கொடுப் பதென்றும், அந்தக் கர்மங்களை ஜீவர்கள் செய்யாமலிருப்பதில்லை என்றும், அஃதோபோல் அந்தக் கருமங்களும் அனுபவத்திற்கு வராமல் போவதில்லை என்றும், துக்கானுபவத்தாலுண்டாகும் கஷ்டம் தெய்வசகாயத்தாலும் தீர்த்த ஸ்நான விசேஷத்தாலும் ஞானிகளுடைய தேகபரிசத்தாலும் நீங்கிவிடுமென்றும், ஆசார தருமங்களையும் பிறர்க்கீதலையும் நிராசையையும் விட்டவர்கள் நரகினையடைவாரென்றும் பெரியோர் சொல்லுவர் என்றறிவாயாக என்றனன். (41–70½)

ஓம் ஹாஹா ஹூஹூ முகஸ்துத்யாயை நம:

## 30. தானதருமங்கள்

சாவித்திரி, யமனை நோக்கி தானதருமாதிகளுடைய விசேஷங் களைக் கேட்க விரும்புகின்றேன் என்று கூற யமன் கூறுகின்ருன்: பரதகண்டத்தில் அன்னதானத்தைச் செய்கிறவன் ஓரன்னத்துக்கு ஒரு வருஷமாகச் சிவலோகத்தில் வாழ்வான். அன்னதானத்துக்கு மேல் தானமென்பது ஒன்று முன்னுமில்லை, இப்போதுமில்லை, இனியுமில்லை. அத்தானத்துக்கு அந்தணரே யன்றி ஏனைய ஜாதி யாரும் உரியவராவர். இதற்கு யோக்கியர் அயோக்கியரென்பது மில்லை ; கால நியமமும் இல்லை. நல்ல பாலுள்ள பசுவை வேதிய ருக்குத் தானஞ்செய்கிறவன் கோலோகத்திலும், புண்ணிய தீர்த்தக்

கரையில் செய்தவன் அவ்வுலகில் நூறு வருஷமும், தேவாலயத்தில் செய்தவன் கோடி வருஷமும், காமியார்த்தமாய்ச் செய்தவனும், சயனதானஞ் செய்தவனும் சந்திரலோகத்திலும், இரண்டு முக முடைய பசுவைத் தானஞ் செய்தவன் ஒருவருஷம் விஷ்ணு லோகத்திலும் வாழ்வார். வெண்மையான குடையைத் தானஞ் செய்தவன் ஆயிரம் வருஷம் வருணலோகத்திலும், வஸ்திரதானஞ் செய்தவன் பதினாயிரம் வருஷம் வாயுலோகத்திலும், சாளக்கிராமத் தோடு வஸ்திரதானம் செய்தவன் சூரிய சந்திரர் உள்ளவரையில் வைகுண்டத்திலும், ஜீவதானம் செய்தவன் அக்னிலோகத்திலும், கஜதானஞ் செய்தவன் இந்திரனோடு அவனது அர்த்தாசனத்திலும், அஶ்வமும் சிவிகையும் தானஞ்செய்தவன் பதினான்கு இந்திர னுடைய காலமளவு வருணலோகத்திலும், நல்ல தோட்டத்தைத் தானஞ் செய்தவன் ஒரு மன்வந்தரமும், வெண்சாமரை யைத் தானஞ் செய்தவன் பதினாயிரம் வருஷம் வாயு லோகத்திலும் வாழ்வர். தானியத்தையும் ரத்தினத்தையுந் தானஞ் செய்தவர்கள் புத்தி சூக்ஷ்மத்தையும் சிரஞ்சீவித் தன்மையையும் அடைவர் ; ஏற்போரும் வைகுண்டத்தை யடைவர். பௌர்ணமியில் டோலோற்சவம் செய்கிறவன் ஜீவன் முக்தனாய் இவ்வுலக சுகத்தையும் அனுபவித்து தேகாந்தத்தில் பரம பதத்தையும் அடைகிறான். அந்த உற்சவத்தை உத்தர பல்குனி நக்ஷத்திரத்தில் செய்தால் இருநூறு மன்வந்தரம் விஷ்ணுபதத்தில் வாழ்வான். தாமிர பாத்திரத்தில் திலதானஞ் செய்கிறவன் ஒரு எள்ளுக்கு ஒருவருஷம் சிவலோகத்தில் வசித்து, பின்னர் பூலோகம் வந்து, உத்தம ஜாதியிற் பிறந்து சுகியாயும் சிரஞ்சீவியாயு மிருப்பன். பதிவிரதைக்குரிய நற்குண நற்செய்கைகளும், ரூபலா வண்ணிய விசேஷங்களும் நிறைந்துள்ள கன்னிகையை சர் வாபரணத்தோடு அவள் போலும் உத்தம குணம் வாய்ந்துள்ள அந்தணனுக்குத் தானஞ் செய்கிறவன் பதினான்கு இந்திரர்கள் வரையில் சந்திரலோகத்தில் தேவதாசிகளோடு கூடிக்கலந்து சுகித் தும், பின் கந்தர்வலோகத்தில் ஊர்வசியோடு பதினாயிரம் வருஷம் கிரீடித்திருந்தும், அதன்பின் ஆயிரஞ் ஜன்ம பரியந்தம் நல்ல உத்தம ஸ்திரீயோடும் கூடி இல்லறதருமத்தில் வழுவாது வாழ்ந்தும் சுகித்திருப்பன். நல்ல மதுரமான கனிகளைத் தானஞ்செய்கிறவன் கனி ஒன்றுக்கு ஓர் வருஷமாக இந்திரலோகத்தில் வாழ்ந்துப் பின் நல்ல மனையாட்டியையும் நன்மக்களையு மடைந்து நற்கனிகள் நிறைந்துள்ள சிருங்கார உத்தியான வனத்தில் வாழ்வன். சாதாரணமான கனிகளைத் தானஞ்செய்கிறவன் சுவர்க்கத்தில் நீண்டகாலம் வாழ்ந்து பரதகண்டத்தில் பிறக்கின்றான். நானா விதமான பல வர்க்கங்களாலும் பல திரவியங்களாலும் நிறைவித்து கிருஹதானஞ் செய்கின்றவன் நூறு மன்வந்திரம் வரையில் சுவர்க் கத்தில் வசித்துப் பின் பரதகண்டத்திற் பிறந்து மஹாதான புருஷ னாக வாழ்வான். நல்ல விளைநிலத்தைப் புண்ணிய க்ஷேத்திர வாசிக்குத் தானம்செய்கிறவன் நூறு மன்வந்தரம் வைகுண்டத்தில்

வாழ்ந்து பின் பரதகண்டத்தில் வந்து சக்கரவர்த்தியாகின்ருன். அவனைப் பூமிதேவியும் நூறு ஜன்மம் வரையில் அரசனுகவே வைத்துத் தன்னை யாளும்படிச் செய்வாள். (1–38)

சகல பிரயோஜனத்தையும் கொடுக்கும் ஓர் கிராமத்தைத் தானஞ்செய்கின்றவன் லக்ஷம் மன்வந்தரம் வைகுண்டத்தில் வாழ்ந்து, பின் பரதகண்டத்தில் நல்ல குலத்தில்வந்து லக்ஷம் கிராமத்துக் கதிகாரியாகின்ருன்; அவனைப் பூமிதேவியும் லக்ஷம் ஜன்மம் அப்படியே வாழச்செய்வள். நல்ல ஜனங்களோடும் நல்ல பல விருக்ஷங்களோடும் நல்ல கொடிவகைகளோடும் நல்ல தாமரைத் தடாகங்களோடும் கூடியுள்ள அரிய நகரத்தைத் தானஞ் செய்கின்றவன் பத்துலக்ஷம் இந்திரர் வரையில் கைலாசத்தில் வாழ்ந்து, பின் பரதகண்டத்தில் ராஜேந்திரனுய் லக்ஷங் கிராமங் களை யுடையவனுய் லக்ஷம் வருஷம் வாழ்வானென்பதிற் சந்தேக மில்லை. அப்படிப்பட்ட நல்ல நூறு கிராமத்தைத் தானஞ் செய்கின்றவன் கோடிமன்வந்தரம் வைகுண்டத்தில் வசித்துப் பின் பரதகண்டத்தில் வந்து ஜம்பு த்வீபத்துக் கதிபதியாய் இந்திர சம்பத்துடையவனுய் ராஜராஜாக்களெல்லாம் அடிபணியத்தக்க வனுய் கற்பாந்தபரியந்தம் வாழ்கின்ருன். பூமிக்குரிய சர்வாதிகாரத் தோடு பூதானஞ்செய்கிறவன் அதற்கு நான்கு பங்கதிகமாய்ப் பெறுவான். ஜம்பு த்வீபத்தையே நல்ல தபஸ்விக்குத் தானங் கொடுக்கின்றவன் சர்வக்ஷேத்திர வாசபலனையும், சர்வதீர்த்த ஸ்நானபலனையும், சர்வதான பலனையும் அடைகின்ருன்; அவனடையாத தொன்றுமில்லை. தேவி பக்தனுகின்றவனுக்கு அம்மையிலும் இம்மையிலும் அடையப்படுவதொன்றில்லை; ஸ்ரீ தேவியின் சிறந்த ஸ்தானமாகிய மணித்வீபத்தில் நீங்காது வாசஞ்செய்யப்பெறுவதே அவன் பெறத்தகும் பேருகும்; மீண்டும் பிறப்பதென்பதையறியான்; பிரமர்களுடைய இறப்பையெல்லாம் பார்த்துக்கொண்டே யிருப்பன். தேவி மந்திரத்தை யுபாசிக்கின்ற வர்கள் பிறவியெடுக்கும் அல்லலைவிட்டு திவ்ய விபூதிமான் களாய்த் தேவியினது சாரூப்பியமாகிய திவ்யரூபத்தைப்பெற்று அத்தேவியினது பாதசேவையைச் செய்துகொண்டிருப்பர். சேதனு சேதனங்கள் எத்தனைமுறை அழிவெய்தினும் அவர்கள் அழிவெய் தார். கார்த்திகை மாதத்தில் துலாதானஞ் செய்கின்றவர் மூன்று யுகம் விஷ்ணுபதத்தில் சுகித்திருந்துப் பின் பூமியிற் பிறந்து ஜிதேந்திரியர்களாய் ஈஸ்வரபக்தியடைவர். அருணேதயகாலத்தில் கங்கை மத்தியில் ஸ்நானஞ்செய்கின்றவர் அறுபதினுயிரம் வருஷம் விஷ்ணுலோகத்தி லிருந்துப் பின் பூவுலகில் நல்ல ஜன்மமடைந்து விஷ்ணுமந்திரத்தை ஜபித்து முன்போல் விஷ்ணுலோகத்தை யடைகின்ருர். அதுபோல் நித்தியமும் ஸ்நானம் செய்கின்றவர் பரிசுத்தர்களாய் ஒவ்வோரடிக்கு ஒவ்வோர் அஸ்வமேத பலனை யடைகின்றனர்; அவரது பாததூளியினுல் பூதேவி பரிசுத்தமடை கின்ருள். அவர் சூரிய சந்திரர் உள்ளவரையில் பரமபத வாசி

யாகிப் பின் நற்குலத்திற்பிறந்து ஈஶ்வர பக்தி யுடையவராய் ஜீவன் முத்தராய் ரிஷிகளுக்குள் சிறந்த பிரம்ம தேஜோ ரூபராய் சர்வதர்மத்திலும் ஆசையுள்ளவராய் பண்டிதராய் இந்திரிய நிக்ரகராய் வாழ்வர். சூரியன் மீனம் கடகம் இந்த ராசிகள் நடுவிலிருக்கும்போது பரிமளமுள்ள நல்ல தீர்த்த மாத்திரமாயினும் சுத்தாத்மாக்களுக்குக் கொடுக்கின்றவன் கைலாயத்தில் பதினுன்கு இந்திரர்வரையில் வாழ்ந்திருந்து, பின் நல்லகுலத்திற் பிறந்து ரூபவானுய் சுகமுள்ளவனுய் சிவபக்தனுய் வேதவேதாந்த முணர்ந்தவனுய் வாழ்கின்றவனுவான். வைகாசி மாதத்தில் மா தானஞ்செய்கின்றவன் அந்தமாவின் ஒரு துகளுக்கு ஒரு வருஷமாகச் சிவலோகத்திலிருந்துப் பின் பூலோகத்தில் வந்து சிவபக்தியுடையவனுய் பண்டிதனுய் புத்திரபாக்கிய முடையவனுய் சீமானுய்ப் பூமிமானுய் வாழ்கின்றவனுவான். சித்திரையிலாவது மாகமாசத்திலாவது சங்கரனைப் பூஜித்துக் கையில் பிரம்பெடுத்துக்கொண்டு பக்தியோடு இரவும் பகலும் ஒரு மாதமாவது அதிற்பாதியாவது பத்துநாளாவது ஏழுநாளா வது இரண்டுநாளாவது நிருத்தஞ்செய்கின்றவன் சிவலோகத்தில் வசிப்பன். ஸ்ரீ ராமநவமியை அனுஷ்டிக்கின்றவன் ஏழுமன்வந்தரம் விஷ்ணுலோகத்திலிருந்து பின்பிறந்து ராமபக்தனுய் செல்வ வானுய் வாழ்கின்றவனுவான். பிரகிருதி தேவிக்கு சரத்காலசம்பந்த மான பூஜையை எருமை வெள்ளாடு முதலான நைவேத்தியங்களா லும் தூபதீப நிருத்தகீதாதி உபசாரங்களாலும் பலவிதமான மங்களத்தையுஞ் செய்கின்றவன் சிவலோகத்தில் ஏழுமன்வந்தரம் சுகமடைந்து மீண்டும் பிறந்து நிர்மலமான புத்தியையும் நிகரற்ற சம்பத்தையும் புத்திர பௌத்திராதி விருத்தியையு மடைவதுமன்றி யானை குதிரைகளோடு கூடியவனுய் ராஜாக்களுக்கெல்லாம் பிரபுவாய் மகாபிரபாவத்தோடு வாழ்வான். ஒரு வருஷம் பிரதி சுக்கிலாஷ்டமியிலும் பாரத வருஷத்தில் புண்ணிய க்ஷேத்திரத்தில் ஷோடசோபசாரத்துடன் மகாலக்ஷ்மியைப் பூஜிக்கின்றவன் கோலோகத்தில் பதினுன்கு இந்திரர் வரையில் வசித்து நற்குலத் திற்பிறந்து ராஜராஜேஶ்வரனுவன். (39–84)

கார்த்திகை பூரணையில் ராஜமண்டலஞ் செய்து நூறு கோபர் களையும் நூறு கோபிகைகளையுங் கூட்டி மண்ணிலாவது கல்லி லாவது ராதாகிருஷ்ணரை எழுதி ஷோடசோபசாரத்துடன் பக்தி யோடு பாரத வருஷத்தில் பூஜிப்பவன் பிரமனுயுள் பரியந்தம் கோலோகத்தில் வசித்துப் பின் பாரத வருஷத்தில் வந்து கிருஷ்ண பக்தனுய் கிருஷ்ண மந்திரத்தைப் பெற்று கோலோகமடைந்து கிருஷ்ணசாரூபத்தையடைந்து கணங்களுக்கதிபதியாவான்; அவ னுக்குப் பிறப்புண்டாகாது. சுக்ல கிருஷ்ணபக்ஷ ஏகாதசியில் விஷ்ணுவைக் குறித்து ஆராதிக்கின்றவன் வைகுண்டத்தில் பிரம னுயுள் வரையில் வசித்துப் பின் பிறந்து கிருஷ்ணபக்தனுய் தேகத்தைவிட்டு கோலோகத்தை யடைகிருன். பாத்திரபத சுக்ல பக்ஷ துவாதசியில் இந்திரனை உபாசிக்கின்றவன் அறுபதினுயிரம்

வருஷம் இந்திரலோகத்தில் சுகித்திருப்பன். ஆதிவாரத்திலும் மாசசங்கிரமணத்திலும் சுக்லபக்ஷ சப்தமியிலும் சூரியனைக் குறித்து ஹவிசான்னம் உபயோகிக்கின்றவன் சூரியலோகத்தில் பதினான்கு இந்திரர் வரையிலிருந்துப் பின் பிறந்து அரோகியாய்ச் சம்பத்துடன் வாழ்வான். ஜேஷ்டமாச கிருஷ்ண சதுர்த்தசியில் சாவித்திரியைப் பூஜிப்பவன் ஏழுமன்வந்தரம் பிரமலோகத்திலிருந்து பின் பூமியில் வந்து அளவில்லாத பராக்கிரமமும் ஆயுளும் ஞானமும் சம்பத்தும் உள்ளவனாகின்றான். மாகமாத சுக்ல பஞ்சமியில் ஸரஸ்வதியை ஷோடசோபசாரத்துடன் பூஜிப்பவன் மணித்வீபத்தில் பிரமனாயுள் வரையில் பூஜ்யனாயிருந்துப் பின்பு சக்ரேச்வரனாகப் பூமியில் வாழ்வான். பசு பொன் முதலானவைகளைத் தானஞ் செய்கிறவன் பசுவின் ரோமம் ஒன்றுக்கு இரண்டு வருஷமாக விஷ்ணுலோகத்திலிருந்துப் பின் பிறந்து புத்திர மித்திர களத்திர சம்பத்திற் குறைவற்றவனாய் ராஜராஜேஶ்வரனாய் வாழ்வன். பரிசுத்தமான மிருஷ்டான்னத்தைக் கொடுக்கின்றவன் அவனது ரோமம் ஒன்றுக்கு ஒரு வருஷமாக விஷ்ணு லோகத்திலிருந்துப் பின் சுகமுள்ளவனாயும் தானஞ் செய்கின்றவனாயும் சிரஞ்சீவியாயும் சம்பத்துள்ளவனாயும் நிகரற்ற பராக்கிரமமுள்ளவனாயும் பிறந்தனுபவிப்பன். ஹரிநாமத்தைக் கூறுகின்றவன் நாமம் ஒன்றுக்கு ஒரு வருஷம் விஷ்ணுலோகத்தில் வசித்துப் பின் இவ்வுலகிற் பிறந்து சுகமுற்றவனாய் தான்யவானாயிருப்பன். அதனை நாராயண க்ஷேத்திரத்திலிருந்து கூறின் கோடி பங்கு அதிகமும் கோடி உரு ஜபிப்பின் சர்வபாப நிவிர்த்தியும் ஜீவன்முக்தியும் விஷ்ணு சாரூபமும் வைகுண்ட வாழ்வுமுண்டாகும். பார்த்திவலிங்கத்தை மரணபரியந்தம் பூஜிப்பவன் சிவலோகத்தில் ஒரு நாளுக்கு ஒரு வருஷமாகவிருந்துப் பின் பிறந்து ராஜராஜேந்திரனாவன். சாளக்கிராம சிலையைப் பூஜித்து அதன் தீர்த்தத்தைப் பானஞ் செய்கின்றவன் வைகுண்டத்தில் நூறு பிரமன் வரையிலிருந்துப் பின் பிறந்து ஹரிபக்தனாய் கிருஷ்ணலோகஞ் சென்றிருப்பன். எல்லா விரதங்களையும் தபசுகளையும் செய்தவன் வைகுண்டபதத்தில் பதினான்கு இந்திரர் வரையில் சுகமுள்ளவனாயிருந்துப் பின் பாரத வருஷத்தில் ராஜேந்திரனாய்ப் பிறந்து முக்தனாவான். சகல தீர்த்தங்களிலும் ஸ்நானஞ் செய்து பிரதக்ஷிணஞ் செய்கின்றவன் மோக்ஷமடைகின்றான்; அவன் மீண்டும் பிறப்பதில்லை. பாரத வருஷத்தில் அஶ்வமேதஞ் செய்கின்றவன் குதிரையின் ரோமம் ஒன்றுக்கு ஒரு வருஷமாக இந்திரன் அர்தாசனத்தில் வீற்றிருப்பான். ராஜசூய யாகத்தினால் நான்கு பங்கு பலன் கிடைக்கும். (85–119)

தேவி யக்ஞம் எல்லா யாகங்களினும் சிறந்தது. அதற்குச் சமானமானது மூவுலகிலும் கிடையாது. அதனைத் திரிபுரசங்கார சமயத்தில் பிரம விஷ்ணு ருத்திரர்கள் செய்தார்கள். தக்ஷனும் இந்த யாகத்தைச் செய்து தக்ஷபிரஜாபதியாய்த் தானெண்ணியவாறே யாவுமடையும் ஆற்றலுடையவனாய்த் தேவியைத் தன் மக

ளென்றழைக்கும் பாக்கியம் பெற்றனன். இவ்வாறே தர்மராஜன் கஶ்யபர் ஆதிசேஷன் கர்த்தமப் பிரஜாபதி சுவாயம்புவமனு பிரிய விரதன் சனத்குமாரர் கபிலர் முதலிய யாவரும் செய்தனர். தேவி யாகம் ஒன்றைச் செய்தால் ஆயிரம் ராஜசூயயாக பலனையடை கிறான். தேவி யக்ஞத்தைப்போல் அதிபலனைத் தரத்தக்கது ஒன் றேனுங் கிடையாது. ஆகையால் இதைச் செய்தவன் நூறு வருஷம் சிரஞ்சீவியாய் ஜீவித்து ஜீவன்முக்தனாய் ஞானப்ரகாச னாய் வாழ்வான். தேவர்களில் மஹாதேவரும், ரிஷிகளில் நாரதரும், சாஸ்திரங்களில் வேதமும், நான்கு வர்ணங்களில் பிராமண வர்ண மும், புண்ணிய தீர்த்தங்களில் கங்கையும், பரிசுத்த வஸ்துக்களில் விபூதியும், விரதங்களுக்குள் ஏகாதசியும், புஷ்பங்களுக்குள் துளசியும், நக்ஷத்திரங்களுக்குள் சந்திரனும், பக்ஷிகளில் கருட னும், ஸ்திரீகளுக்குள் பிரகிருதி ராதை வாணி பூமி இவர்களும், கர ணங்களுக்குள் மனமும், பிரஜாபதிகளுக்குள் பிரமனும், பிரஜை களுக்குள் அரசனும், வனங்களுக்குள் பிருந்தாவனமும், வருஷங் களுக்குள் பாரதவருஷமும், சம்பத்துகளுக்குள் லக்ஷ்மியும், வித்வான்களுக்குள் ஸரஸ்வதியும், பதிவிரதைகளுக்குள் துர்க்கை யும், ஸௌபாக்கியவதிகளுக்குள் ராதிகையும் எப்படிச் சிறந்த வர்களோ அப்படி சர்வயக்ஞத்திலும் தேவீயக்ஞம் சிறந்ததாம். நூறு அஶ்வமேதத்தால் இந்திரபதமும் ஆயிரம் அஶ்வமேதத்தால் விஷ்ணுபதமுங் கிடைக்கின்றன. அப்படியே பிரிதிவி என்பவன் ஆயிரம் அஶ்வமேதஞ்செய்து வைகுண்டமடைந்தனன். தேவி யினது பதம் சகல விரதங்களையும் தவங்களையும் வேதசிரவணங் களையும் பூ பிரதக்ஷணங்களையும் செய்து முற்றுப்பெற்றவர்க்கே கிடைக்கும். தேவியினது பாதகமலபூஜையே வேதபுராண இதிகாசங் களின் சாரமானதாகும். அதனால் தேவிவர்ணனையும் தியானமும் நாமமும் குணகீர்த்தனமும் தோத்திரமும் ஸ்மரணமும் சேவிப்பதும் ஜபமும் பாதோதக பானமும் நைவேத்தியபக்ஷணமும் பிரதி தினமும் செய்வதில் யாவரும் ஆசையாயும், சர்வசம்மதமாயும் இஷ்டமாயுமிருக்கின்றனர். ஆகையால் நீ அந்த நிர்குணமான பரப்பிரகிருதிரூபமாக விருக்கின்ற பரப்பிரம்மரூபிணியைப் பிரதி தினமும் சேவிப்பாய். ஓ குழந்தையே ! இனி நீ உன் பர்த்தாவைப் பெற்று வீட்டிற்குச்சென்று சுகமாக வாழக்கடவாய். மனிதர்களு டைய கர்மவிபாகத்தை உனக்குக் கூறினேன். யாவராலும் ஒப்புக் கொள்ளப்பட்டதாயும் விரும்பப்பட்டதாயும் உள்ள கர்மவேற்றுகளை யறிகின்றவர்களுக்குத் தத்வக்ஞானம் உண்டாகுமென்றறிவாயாக என்றனர்.

(120–140)

ஓம் ஹானிவ்ருத்தி விவர்ஜிதாயை நம:

## 31. யமாஷ்டகம்

நாராயணர் கூறுகின்றார் :—யமனிடம் சாவித்திரி தேவி சங் கீர்த்தனத்தைக் கேட்டுக் கண்ணீரரும்பிப் புளகாங்கிதங்கொண்டு

ஒரு வார்த்தை சொல்லுகின்றாள் : ஓ தருமராஜனே! சக்தியின் உத்கீர்த்தனம் யாவரையும் உத்தரிக்கச்செய்யுங் காரணமாயுள்ளது. கேட்போருக்கும் சொல்வோருக்கும் பிறப்பிறப்பு முதலிய யாவும் நீங்கும். தானவர் சித்தர் தபஸ்விகளாலும் செய்யப்பட்டது அதுவேயாம். வேதவாக்கியங்களால் புகழ்வதுவும் அவளது சேவையே எனப்படும். அதுவேதான் தவமும் யோகமும், அவற்றுலடையும் பதமுமாம். மோக்ஷமும் அமரத்துவமும் சர்வ சித்தியும் ஆகிய இவையெல்லாமும் சக்தி கீர்த்தனஞ்செய்யும் சேவகனுடைய ஒரு கலைக்குச் சமானமாகாது. ஆகலான் அத் தேவியினது கீர்த்தன விதியைக் கூறும். ஓ தருமராஜரே! மனிதர் களது சுபகர்மத்தைக் கூறியதுபோல் அசுபகர்மத்தையுங் கூற வேண்டுமென்று பிரார்த்தித்து யமாஷ்டகத்தால் அவனைத் தோத்திரஞ் செய்கிருள். (1–6)

முன் சூரியன் தபசினுல் தர்மத்தை யாராதித்து உம்மைப் பெற்றதனுல் தருமராஜனெனப் பெயர்பெற்ற உம்மை நமஸ்கரிக் கின்றேன். சர்வ சாக்ஷியாயிருக்கின்ற உமக்குச் சர்வப் பிராணி களிடத்திலும் சமத்துவம் இருக்கின்றதனுல் சமனெனப் பெயர் பெற்ற உம்மை நமஸ்கரிக்கிறேன். பிரபஞ்சத்தில் சர்வப் பிராணிகளுக்கும் நாசமுண்டாக்குவதனுல் யமனென்று பெயர் பெற்ற உம்மை நமஸ்கரிக்கிறேன். காலத்துக்குத்தக்கவாறு சர்வப் பிராணிகளையும் நாசஞ்செய்கின்றபடியால் கிருதாந்தகனெனப் பெயர்பெற்ற உம்மை நமஸ்கரிக்கின்றேன். பாபிகளைச் சுத்தி செய் யத் தண்டாயுதத்தைத் தரித்திருக்கிறபடியால் தண்டதரனெனப் பெயர்பெற்ற உம்மை நமஸ்கரிக்கின்றேன். தபஸ்வியாயும் பிரம்ம நிஷ்டராயும் ஜிதேந்திரியராயும் ஜீவர்களுக்குக் கர்மபலத்தைக் கொடுக்கின்றவராயும் இருக்கிறபடியால் யமனெனப் பெயர் பெற்ற உம்மை நமஸ்கரிக்கின்றேன். தம்முடைய ஆத்மாவையே தோட்ட மாகவுடைத்தானவராயும் சர்வக்ஞராயும் பாபிகளுக்குக் கஷ்டத் தைக் கொடுக்கின்றவராயும் புண்ணியமித்திரராயும் இருப்பதால் புண்ணிய மித்திரனெனப் பெயர்பெற்ற உம்மை நமஸ்கரிக் கின்றேன்; பிரம்மாவின் அம்சத்தாலும் பிரம்மதேஜசினுலும் பிரகாசித்து பிரம்மத்தை தியானிக்கின்ற ஈசராகிய உம்மை நமஸ்கரிக்கின்றேன்.

ஓ முனிவரே! இந்த அஷ்டகத்தை பிராதக்காலத்தில் படிக் கின்றவனுக்கு யமபயம் போவதோடு சகலபாபங்களும் போம். மகாபாபியானவன் இதனைப் படிப்பானுயின் அப்பாவத்தா லனுபவிக்கப்படும் தேகதண்டனையாதிகளும் அவனுக்கு யமனுல் செய்யப்படா என்றூர். (7–17½)

ஓம் ஹையங்கவீன ஹ்ருதயாயை நம:

# 32. நரககுண்டங்கள்

நாராயணர் கூறுகின்றார் :—பிறகு தருமராஜன் மாயாபீஜ மான மகாமந்திரத்தை விதிப்படி உபதேசித்து, ஓ பெண்ணே! ஆன்மகோடிகள் செய்யும் புண்ணியபாவ கர்மங்களுக்குத் தக்கவாறு சுவர்க்க நரகங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அவற்றுள் புண்ணிய பேதங்கள் எத்தனையுண்டோ அத்தனைவிதமாக சுவர்க்க லோக சுகானுபவ பேதங்களும், பாவபேதங்கள் எத்தனையுண்டோ அத்தனை விதமாகத் துக்கானுபவ நரகபேதங்களும் உண்டாக்கப் பட்டிருக்கின்றன. ஆகலான் புண்ணிய கர்மாவையே செய்தவர் நரகினையும், அஃதேபோல் பாபகர்மாவைச் செய்தவர் சுவர்க்கத் தையும் அடையார். இரண்டையுஞ்செய்தவர் அந்தந்தக் கர்மாக் களின் பலாபலத்துக்குத் தக்கபடி முன்பின்னாக இரண்டையும் அடைகின்றனர். இப்பேதங்களை இவ்வுலகிலுங் காணலாம். சிலர் பிறந்தநாள்தொட்டு இறக்குமளவும் சுகத்தையே அனுபவித்தும், சிலர் துக்கத்தையே அனுபவித்தும், சிலர் முன்னே சுகத்தையும் சிலர் பின்னே துக்கத்தையும் சிலர் முன்னே துக்கத்தையும் பின்னே சுகத்தையும் அனுபவித்தும் வருகின்றனர். சுவர்க்க நரகங்களாகச் சொல்லப்பட்ட அவ்விடங்களைப்போலவே இங்கும் சுகத்தையே கொடுக்கின்ற இடங்களும், அப்படியே ஊர்வன நீர்வாழ்வன விலங்கு பறவைகள் முதலிய சரீரபேதங்களும் காணப்படுகின்றன. அச்சரீரங்கள் துன்பஞ் செய்வனவாயும், செய்யாதனவாயும், துக்கத்தை யனுபவிப்பனவாயும், சுகத்தை யனுபவிப்பனவாயும், தாவரங்களும் உபயோகப்படத்தக்கவை யாயும், படாதவையாயும் இருக்கின்றன. இவையெல்லாம் சுவர்க்க நரகானுபவங்கள் உண்டென்றறிதற்கு அமைக்கப்பட்டுள்ள அடையாளங்களேயாகும். அன்றியும் சுவர்க்க நரக அனுபவ விசேஷங்களை அனுபவிப்பாரும் இங்குளராகலின் அவர்களுக்காக வும் அமைக்கப்பட்டுள்ளன வென்று அறிவாயாக. (1–6)

இனி, புராணபேதங்களால் நாமபேதப்பட்டிருக்கின்ற நரகங் களின் பெயர்களைக் கூறுகின்றேன் கேட்பாயாக :—வன்னி குண்டம், தப்தகுண்டம், க்ஷார (உப்பு) குண்டம், மலகுண்டம், மூத்திரகுண்டம், சிலேஷ்மகுண்டம், விஷகுண்டம், தூஷிகா (கண்மல) குண்டம், வஸா (சிலைநீர்க்) குண்டம், சுக்லகுண்டம், ஸ்ருக் (ரத்த) குண்டம், அச்ரு (கண்ணீர்க்) குண்டம், காத்ரமல (தேகஅழுக்கு) குண்டம், கர்னவிட் (காதுகுரும்பி) குண்டம், மஜ்ஜா குண்டம், மாம்ச குண்டம், நககுண்டம், லோமகுண்டம், கேச குண்டம், அஸ்தி குண்டம், தப்ததாம்ர குண்டம், லோஹ குண்டம், சர்மகுண்டம், நன்ருய்க்காய்ச்சின கட்குண்டம், முட் குண்டம், விஷநீர்க்குண்டம், விஷகுண்டம், காய்ச்சின எண் ணெய்க் குண்டம், இடித்துக்கொண்டே யிருக்கும் உலக்கைக்

குண்டம், புழுக்குண்டம், பூய (ஆவியோடின அவிந்த) குண்டம், சர்ப்ப குண்டம், கொசுகுகுண்டம், பயங்கரமான விஷகுண்டம், வஜ்ர தம்ஷ்டிரகுண்டம், தேள்குண்டம், சர (பாண) குண்டம், சூலகுண்டம், பயங்கரமான கத்திக்குண்டம், கோளகுண்டம், முதலைக்குண்டம், காககுண்டம், மந்தானகுண்டம், பீஜகுண்டம், வச்சிரகுண்டம், தப்தபாஷாணகுண்டம், தீக்ஷ்ணபாஷணகுண்டம், லாலா (சொள்) குண்டம், மஸீகுண்டம், சூர்ணகுண்டம், சக்கர குண்டம், வக்கிரகுண்டம், கூர்மகுண்டம், மகோல்பணம், ஜ்வாலா குண்டம், பஸ்மகுண்டம், தப்த (கொளுத்துங்) குண்டம், தப்தசூசி (காய்ச்சியிருக்கும் ஊசி), அசிபத்திரவனம், க்ஷுரதாரம் (கத்திக் கறுக்கு) ஆட்டுமுகம், கோகாமுகம் நக்ரமுகம் (முதலை), கஜதம்சம், (யானைக்கடி), கோமுகம், கும்பீபாகம், காளசூத்திரம், மத்சியோதம், கிருமி கந்துகம், பாம்ஸு போஜ்யம் (தூளியைச் சாப்பிடுதல்), பாசவேஷ்டம் (கயிற்ருல் கட்டிப்போடல்), சூலப் ரோதம் (சூலத்தில் கோர்த்தல்), பிரகம்பனம் (அசைத்தல்), உல்காமுகம் (கொள்ளிக்கட்டை), அந்த கூபம், வேதனம் (குத்தல்), தாடனம் (அடித்தல்), ஜாலரந்திரம் (ஜன்னல்சந்து), தேக சூர்ணம் (தேகத்தைப் பொடிப்படுத்தல்), தலனம் (பிளத்தல்), சோஷணம் (வற்றச்செய்தல்), கஷம் (தேய்த்தல்), சூர்ப்பம் (முறம்), ஜ்வாலா முகம், தூமாந்தம் (புகையிருட்டு), நாகவேஷ்டனம் (பாம்புசுற்றிக் கொள்ளுதல்) இவ்வகைத்தாய் துக்கிதர்களுக்குத் துக்கத்தையும் கிலேசத்தையும் கோரமான பயங்கரத்தையும் இழிவையும் கொடுக் கத்தக்க நரகங்கள் எண்பத்தாறுள்ளன. பதிவிரதையான ஓ சாவித்திரீ ! இவைகள் பாபிகளுக்குக் கஷ்டத்தைக் கொடுக்கின்ற வர்களாயும் மதமத்தர்களாயும் பயங்கரர்களாயும் தண்டபாச கதா சூலஹஸ்தர்களாயும் குரூரர்களாயும் தமோகுண முடையவர்களா யும் தயையற்றவர்களாயும் தேஜசுள்ளவர்களாயும் பயமற்றவர்களா யும் சிவந்தும் பச்சையாயுமுள்ள கண்ணுடையவர்களாயும் யோகத் தோடும் சித்தியோடும் கூடினவர்களாயும் பலவித ரூபத்தைத் தரித் தவர்களாயும் எல்லாத் தொழில்களையும் அஞ்சாது செய்கின்ற பாபி களால் மரணகாலத்தில் காணப்பட்டவர்களாயும், தன் கர்மத்தி லேயே பிரீதியுள்ளவர்களாயும் சாக்தர்களாலும் சௌரர்களாலும் காணுபத்தியர்களாலும் புண்ணியஞ் செய்தவர்களாலும் சித்தர் களாலும் யோகிகளாலும் சுதந்தரமற்றவர்களாலும் காணத்தகாத வர்களாயும், பலவான்களாலும் பயமற்றவர்களாலும் சொப்பனத் தில் காணப்படுகிறவர்களாயு மிருக்கிற படர்களாலும் பதினு யிரம் கிங்கரக் கூட்டங்களாலும் எப்போதும் ரக்ஷிக்கப்படுகின்றன வாய் இருக்கின்றன. இனி எவரெவர்கள் எதிலெதில் வசிக்க வேண்டுமோ அதனையுங் கேட்பாயாக என்றனர். (7–28)

ஓம் ஹரிகோபாருணாம்துகாயை நம:

## 33. நரகதண்டனைகள் (1)

தருமராஜன் கூறுகின்றார் :—ஈஸ்வரசேவையில் பிரீதியுள்ளவனும், சுத்தமானவனும், யோகசித்தனும், விரதமுள்ளவனும், தபஸ்வியும், பிரமசாரியும், நரகினையடையார்; இது நிச்சயம். இளைத்திருக்கும் பந்துக்களைச் சுடுசொல்லால் சுடுகின்றவன் வன்னி குண்டத்தில் அவன் தேக ரோமம் எவ்வளவோ அவ்வளவு வருஷ காலமிருந்துப் பின் பாபிகளா லுயிருடன் கொளுத்தப்படும் மிருக ஜன்மத்தை மூன்றுதரம் அடைகின்றான். பசி தாகத்தால் மிகவும் வருத்தப்பட்டுத் தன் வீட்டுக்கு வந்த பிராமணனைப் புசிப்பிக்காதவன் துக்கத்தைச் செய்கிற தப்தகுண்டத்தில் தன் ரோமத்துக்கு ஒரு வருஷமாக நீர் வறண்ட இடத்தில், நெருப்பினால் கொளுத்தப்பட்ட இடத்தில் ஏழு ஜன்மம் பக்ஷியாகப் பிறக்கின்றான். ஞாயிற்றுக்கிழமை மாதப்பிறப்பு அமாவாசை சிராத்த தினம் இக்காலங்களில் வஸ்திரங்களுக்கு அழுக்குப்போக உப்பைச் சேர்க்கின்றவன் க்ஷாரகுண்டத்தில் நூறுக்கு ஒரு வருஷமாக இருந்துப் பின் ஏழு ஜன்மம் வரையில் வண்ணானாகப் பிறக்கின்றான். மூலப்பிரகிருதியையும் வேதசாஸ்திர புராணாதிகளையும் பிரம விஷ்ணு சிவ பார்வதி ஸரஸ்வதி முதலியவர்களையும் நிந்திக்கின்றவர்கள் பயங்கரமான மேற்கூறிய குண்டத்தில் அநேக கற்பகாலமிருந்துப் பின் கர்ப்பயோனியை யடைகிறார்கள். தேவி நிந்தாபராதமான குற்றத்துக்குப் பிராயச்சித்தங் கிடையாது. ஒருவன் தானேயல்லாமல் தன்னாலும் பிறராலும் உண்டாக்கப்பட்ட விருத்திகளை அவர்களுக்குப் பயன்படுத்தாமல் ஒருவனே அபகரிக்கின்றவன் அறுபதினாயிரம் வருஷம் மலகுண்டத்தில் மலத்தைச் சாப்பிட்டுக்கொண்டேயிருந்து பின் மலத்தில் புழுத்த புழுவாகின்றான். ஜீர்ணமான தடாகத்தைப் புதுக்காது நூதனமாகத் தடாகமெடுப்பவன் மூத்திரகுண்டத்தையடைந்து வெட்டுமண் தூளிக்கு ஒருவருஷம் அதனையேயுண்டு நூறுவருஷம் விருஷபமாய்ப் பிறக்கின்றான். பக்ஷ்யபோஜ்யத்தோடு கூடின அன்னத்தை உண்பவருடனிருந்துண்ணாமல் ஒருவனாய்ப் புசிக்கின்றவன் சிலேஷ்ம குண்டத்திலிருந்து நூறுவருஷம் அதனையே புசித்துப் பாரதவருஷத்தில் நூறுவருஷம் பிரேதமாயிருந்து சிலேஷ்மத்தையும் மூத்திரத்தையும் சீலைத்தண்ணீரையும் புசித்துப் பிறகு சுத்தியாவான். தாய்தந்தை குருபத்தினி பிள்ளை பெண் நாதனற்றவள் இவர்களைப் போஷிக்காதவன் விஷ (கர) குண்டத்திலிருந்து அதை நூறு வருஷம் புசித்துப்பின் நூறுவருஷம் பூதயோனியையடைந்து பிறகு சுத்தியாகின்றான். அதிதியைப்பார்த்து கண்ணைக் கோணல் செய்கின்ற பாபியினால் கொடுக்கப்படும் தர்ப்பணஜலத்தை தேவர்களும் பிதுர்க்களும் கிரகியார். பிரம்மஹத்தி முதலான பாபங்களைச் செய்கின்றவர்கள் தூஷிகாகுண்டத்திலிருந்து நூறுவருஷம் அதனையே புசித்துப்பின் நூறுவருஷம் பூதயோனியையடைந்து பின்பு சுத்தி

யாகிறுர். பிராமணனுக்குத் திரவியங்கொடுத்து மறுபடியும் வாங்கி மற்றொருவருக்குக் கொடுக்கின்றவன் வஸாகுண்டத்தில் நூறுவருஷ மிருந்து அதனையே புசித்துப் பாரதத்தில் ஏழுதரம் ஒணுனகப் பிறந்து பின் குரூரனுயும் அற்பாயுளுடையவனுயும் தரித்திரனுயும் பிறப்பான். புருஷனை ஸ்திரீயாவது ஸ்திரீயைப் புருஷனுவது சுக்லத்தைக் குடிக்கும்படிச் செய்கின்றவர்கள் சுக்ல குண்டத்தி லிருந்து நூறு வருஷம் அதனையே குடித்து நூறு வருஷம் புழு வாய்ப் பிறந்துப் பின் சுத்தியாகின்றனர். குருவையும் பிராமண னையும் ரத்தம் வரும்படி அடிக்கிறவன் ரத்தகுண்டத்தில் வீழ்ந்து நூறு வருஷம் அதனையே குடித்துப் பின் பாரதத்தில் ஏழுதரம் புலி ஜன்மமடைந்து புனிதனுகின்றுன். பகவானது சங்கீர்த்தனஞ் செய்தும் நிருத்தஞ் செய்தும் பகவானது குணத்தைப் பாடியும் இருக்கின்ற பக்தனைப் பார்த்துக் கண்ணீர்வரச் சிரிக்கின்றவன் கண்ணீர்க்குண்டத்திலிருந்து நூறு வருஷம் அதனையே உண்டு மூன்று ஜன்மம் சண்டாளனுய்ப் பிறந்து சுத்தனுகின்றுன். சினேக னிடம் பிரதி தினம் விரோதிக்கின்றவன், தேகத்திலுண்டாகும் அழுக்குக் குண்டத்தில் நூறு வருஷமிருந்து மூன்று ஜன்மம் கழுதையாயும் நரியாயும் பிறந்து சுத்தனுகின்றுன். செவிடனைப் பரிகசிக்கின்றவன் காதுகுறும்பி குண்டத்தில் நூறு வருஷம் அதனையே புசித்துப் பின் ஏழு ஜன்மம் தரித்திரனுயும் ஏழு ஜன்மம் அங்கஹீனனுயும் பிறக்கின்றுன். லோபத்தினுல் தன்னை ரக்ஷித்துக்கொள்வதற்காக ஒருவன் ஜீவனத்தைக் கெடுக்கின்றவன் மஜ்ஜாகுண்டத்தில் லக்ஷம் வருஷம் அதனைப் புசித்துப் பின் ஏழு வருஷம் முயலாகவும் ஏழு வருஷம் மீனுகவும் மூன்று வருஷம் பன்றியாகவும் ஏழு வருஷம் கோழியாகவும் பிறந்துப் பின் மான் முதலான ஜன்மங்களையுமடைந்து சுத்தியடைகின்றுன். தன் கன்னிகையைக் காப்பாற்றித் திரவியாபேக்ஷையினுல் விற்பனை செய்கின்ற மூடன் மாம்சகுண்டத்தில் கன்னிகையின் ரோமத்துக் கொரு வருஷமாக அதனையே புசித்து நூறு வருஷமிருந்து எமது தூதர்கள் அடிக்கும் அடியைப் பெற்று பூமியில் பிறந்து ரத்த மாம்சங்களைத் தலையிற் சுமந்து அதனின்றும் பெருகும் ரத்தத்தைப் பசியினுல் நக்கிப் பிறகு அறுபதினுயிரம் கன்னிகைகளின் மலத்திற் புழுவாயும் ஏழு ஜன்மம் வேடனுயும் மூன்று ஜன்மம் பன்றியாயும் ஏழு ஜன்மம் கோழியாயும் ஏழு ஜன்மம் தவளையாயும் ஏழு ஜன்மம் அட்டையாயும் ஏழு ஜன்மம் காக்கையாயும் பிறந்து சுத்தி யடைவான். விரதம் சிராத்தம் முதலிய புண்ணிய தினங்களில் சங்கமஞ் செய்கின்றவனும், க்ஷவர கர்மஞ் செய்துகொள்ளுகின்ற வனும், சர்வ கர்மத்திலும் அசுத்தனுயிருக்கின்றவனும், இவரெல் லாம் நகம் லோம(ரோம)ம் நிறைந்துள்ள குண்டங்களிலிருந்து பாவஞ் செய்கிற தினம் ஒன்றுக்கு ஒரு தேவமான வருஷம் அவை களையே தின்பவராய்த் தடியினுலடிக்கப்படுவர். மயிரோடு கூடிய மண்ணினுற் செய்த பார்த்திப லிங்கத்தைப் பூசிக்கின்றவன் லிங்கத்தின் தூள் ஒன்றுக்கு ஒரு வருஷமாக கேசகுண்டத்தி

லிருந்து கடைசியில் சிவபெருமானுடைய கோபத்தால் துருக்க ஞய்ப் பிறந்து நூறு வருஷத்துக்கு மேல் ராக்ஷச ஜன்மமடைந்து சுத்தியாகின்ருன். பிதுர்க்களுக்கு விஷ்ணுபாதத்தில் பிண்டங் கொடுக்காதிருக்கின்றவன் ரோமத்துக்கு ஒரு வருஷமாக அஸ்தி குண்டத்திலிருந்து பின்பு நாயாய் ஏழுதரம் பிறந்து எலும்பைக் கடித்துத் தின்று, பிறகு மகா தரித்திரனுய்ப் பிறந்து தேகசுத்தி யடைகின்ருன். கர்ப்பிணியான ஸ்திரீயை அநுபவிக்கின்றவன் தகிக்கப்பட்ட தாம்பரகுண்டத்தில் நூறு வருஷமிருக்கின்ருன். பிள்ளையும் பர்த்தாவுமில்லாதவள் ருதுஸ்நானம் செய்தவள் இவர்களிடம் அன்னம் புசிக்கின்றவன் லோஹ குண்டத் தில் நூறு வருஷமிருந்து வண்ணுனுகவும் பின் ஏழு ஜன்மம் காக்கையாகவும் ரணமுள்ளவனுகவும் தரித்திரனுகவும் பிறந்து சுத்தியாகின்ருன். * தேவதிரவியத்தை † தோல் கையினுல் தொடுகின்றவன் நூறு வருஷம் சர்மகுண்டத்திலிருக் கின்ருன். சூத்திரனுல் உத்தரவு கொடுக்கப்பட்டவனுய்ச் சூத்திரான் னத்தைப் புசிக்கின்றவன் நூறு வருஷம் நன்ருய்க் காய்ச்சப்பட்ட கள்குண்டத்திலிருந்து, பிறகு ஏழு ஜன்மம் சூத்திர சிராத்தான்னத் தைப் புசிக்கின்றவனுகப் பிறந்து சுத்தனுகின்ருன். வாக்கினுல் துஷ்டனுய்க் கொடுமையாகப் பேசுகின்றவனும் பிரபுவை அடிக் கின்றவனும் தீக்ஷ்ணமான முட்குண்டத்தில் அதனையே தின்பவ னுய் இவனடித்த 'அடியினும் நான்கு பங்கதிகமாக என் தூதரால் அடிக்கப்பட்டவனுய், பிறகு சிரேஷ்டமான குதிரை ஜன்மமெடுத்து சுத்தியாகின்ருன். மானிடனைக் கொல்லுகின்றவன் விஷகுண்ட மடைந்து அதனையே ஆயிரம் வருஷமுண்டு பிறகு மானிடனைக் கொல்லுஞ் சுபாவமுடையவனுயும் ரணமுடையவனுயும் நூறு ஜன்ம மடைந்து பிறகு ஏழு ஜன்மம் குஷ்டரோக முள்ளவனுவன். பசுவை யாவது எருதையாவது பாரத வருஷத்தில் தானுவது வேலைக்கார னைக் கொண்டாவது தடியினுல் அடிக்கின்றவன் நான்கு யுகம்வரை யில் நன்ருய்க் காய்ச்சப்பட்ட தைலகுண்டத்தில் அம்மாடுகளின் ரோமத்துக் கொருவருஷமாக இருந்து எருதாய்ப் பிறப்பான். பிராணிகளைக் குந்தாயுதத்தாலாவது நெருப்பினுற் காய்ச்சிய லோகத்தினுலாவது கொல்லுகின்றவன் குந்த குண்டத்தில் பதினுயிர வருஷமிருந்துப் பின் நல்ல யோனியையடைந்து வியாதியுடைய வனுகக் கஷ்டப்பட்டு சுத்தமாகின்ருன். வீணுக மாம்சத்தைத் தின்னும் பிராமணனும் ஈச்வர நிவேதனமாகாத அன்னத்தைப் புசிப்பவனும் கிருமி குண்டகத்தை யடைந்து, தன் ரோமம் எவ்வளவோ அவ்வளவு காலம் அதனையே புசித்து, மூன்று ஜன்மம் துருக்கனுகப் பிறந்துப் பின் பிராமணனுகப் பிறக்கின்ருர். சூத்திரனுக்கு யாகஞ்செய்விக்கின்றவனும், சூத்திரான்னத்தைப் புசிக்கின்றவனும், சூத்திர சவத்தைக் கொளுத்துகின்றவனும் பூய குண்டகத்தில் தங்கள் ரோமம் எவ்வளவோ அவ்வளவு வருஷ

* சந்தனம் புஷ்பம் பழம் முதலானவை.

† தன் தேகம் முதலியவைகளைத் தொட்டம் கை.

காலமிருந்து அதனையே புசித்து யமதூதர்களால் அடிக்கப்பட்டவர் களாய், பின்பு ஏழு ஜன்மம் சூத்திரராயும் மகா ரோகிகளாயும் தரித்திரர்களாயும் செவிடராயும் ஊமையாயும் பிறக்கின்றூர்கள். சிரசில் பத்மமிருக்கிற சர்ப்பத்தைக் கொல்லுகின்றவன் தன் ரோமம் எவ்வளவோ அவ்வளவு வருஷகாலம் சர்ப்பகுண்டத்தில் சர்ப்பங்களினுல் கடிக்கப்பட்டும் யமதூதர்களால் அடிக்கப்பட்டும் சர்ப்பத்தின் மலத்தைப் புசிக்கின்றவனுயிருந்து பின் சர்ப்பமாய்ப் பிறந்து, பிறகு அசுரனுயும் சர்ப்பத்தினுல் கடிபடுகின்றவனுயும் அற்பாயுள்களில் கஷ்டமான மரணத்தை அடைகின்றவனுயு மிருப்பன். தெய்வத்துக்குக் கொடுக்கப்பட்ட விருத்தியைக் கொண்டு ஜீவிக்கின்றவர்களும் சுவல்ப ஜந்துக்களைக் கொல்லு கின்றவர்களும் அவர்களால் எத்தனை ஜந்துக்கள் மரணமடைந் தனவோ அவ்வளவு காலம் தப்த குண்டத்தும் கொசுகு குண்டத்தும் அவைகளால் புசிக்கப்பட்டவராய் ஆகாரமில்லாதவராய் யமதூதர் களால் கை கால்கள் கட்டப்பட்டு அடிக்கப்பட்டவராய்ப் பிறகு அற்ப ஜந்துக்களாகவும் துருக்கராகவும் அங்கங் குறைவுள்ள வராகவும் பிறந்து சுத்தராகின்றூர். தேனீக்களைக் கொன்று தேனைப் புசிக்கின்ற மூடன், விஷகுண்டத்தில் ஒரு ஜீவனுக்கொரு வருஷமாக விஷத்தைத் தின்று விஷத்தினுல் கொளுத்தப்பட்டு யமதூதர்களால் அடிக்கப்பட்டு, பிறகு ஈ ஜன்மமடைந்துப் பின் சுத்தனுகின்றுன். தண்டனைக் குரியவனல்லாதவனைத் தண்டிக் கின்றவனும், பிராமணனைத் தண்டிக்கிறவனும், வஜ்ர தம்ஷ்டிர மென்னும் புழுகுண்டத்தையடைந்து ரோமத்துக்கொரு வருஷ மாகப் புழுக்களால் கடிபட்டவனுய் கூவுகின்றவனுய் யமதூத ராலடிக்கப்பட்டு அழுகின்றவனுய், பிறகு ஏழுதரம் பன்றி ஜன்ம மடைந்து, பின் மூன்று ஜன்மம் காக்கையாய்ப் பிறந்து சுத்தமா கின்றுன். பணத்திலுள்ள ஆசையினுல் பிரஜைகளைத் தண்டிக் கின்ற அரசன் தேள் குண்டத்தில் தண்டனையடைந்த மனிதர் களுடைய ரோமம் எவ்வளவோ அவ்வளவு காலம் இருந்து ஏழு ஜன்மம் தேளாகவும் பின்பு அங்கஹீனனுகவும் வியாதியுள்ள வனுகவும் பிறந்து சுத்தனுகின்றுன். ஆயுதங்களை எடுத்து இதரர்களைத் துரத்துகின்ற பிராமணன், சந்தியாவந்தனஞ் செய்யா திருக்கின்றவன், ஈஸ்வரபக்தி யில்லாதிருக்கின்றவன், தங்கள் ரோம அளவு காலம் சராதி குண்டங்களிலிருந்து யமதூதர்களால் அடிக்கடி அடிக்கப்பட்டு சுத்தராகின்றூர்கள். ஜனங்களை இருட்டறையில் இடுகின்ற அரசன் சேற்றோடும் காய்ச்சப்பட்ட ஜலத்தோடும் இருளோடும் தீக்ஷ்ணமான பற்களுள்ள புழுக்க ளோடுங்கூடிய கோளகுண்டத்தை யடைந்து தண்டிக்கப்பட்டவ னுடைய ரோமத்துக்கு ஒரு வருஷமாக வசித்துப் புழுக்களால் கடிக்கப்பட்டவனுய்ப் பின்பு வேலைக்காரனுகப் பிறந்து, கிரமமாகச் சுத்தியடைகிறுன். முதலை முதலானவர்களைக் கொல்லுகின்றவன் முதலை முள்ளுக்கொரு வருஷமாக முதலை குண்டத்திலிருந்து பின் முதலையாகப் பிறந்து சுத்தியடைகின்றுன். பரஸ்திரீயினுடைய

மார்பையும் சுரோணிதபாகத்தையும் தனத்தையும் முகத்தையும் பார்க்கின்றவனும், புண்ணிய க்ஷேத்திரத்தில் காமத்தினுல் காம முள்ள ஸ்திரீயைப் பார்க்கின்றவனும், காக குண்டத்தில் வசித்து காக்கைகளால் பிடுங்கப்பட்ட கண்களையுடையவனுய் தனது ரோமத் துக்கொரு வருஷமாக வசித்துப் பின்பு மூன்று ஜன்மம் கொளுத்தப்பட்டவனுவன். தேவர்களுடையதும் பிராமணர்களுடை யதுமான சுவர்ணத்தைத் திருடுகின்றவன் மந்தான குண்டத்தில் ரோமத்துக்கொரு வருஷம் வசித்துத் தூதர்களாலடிக்கப்பட்ட வனுய் மத்தினுல் குத்தப்பட்டவனுய்த் தன் மலத்தையே புசிக்கின்றவனுய்ப் பின் மூன்று ஜன்மம் துருக்கனுயும் ஏழு ஜன்மம் தரித்திரனுயும் மகா குரூரனுயும் பாபிஷ்டனுயும் பிறந்து பின் தட்டானுயும் சொர்ணத்தை விற்பனை செய்கின்றவனுயும் பிறப்பான். தாம்பரத்தையாவது வேறு லோகத்தையாவது திருடு கிறவன் தன் ரோமத்துக் கொருவருஷமாக பீஜகுண்டத்தில் வசித்துப் பீஜ மலத்தைப் புசித்து யமதூதர்களா லடிக்கப்பட்டு சுத்தியாகின்ருன். தேவ விக்கிரகங்களையும் தேவ திரவியத்தையும் அபகரிக்கின்றவன் தாண்டமுடியாத வஜ்ரகுண்டத்தில் ரோமத்துக் கொருவருஷமாக வசித்துக் கொளுத்தப்பட்ட தேகமுடையவனுய் ஆகாரமில்லாதவனுய் யமதூதர்களாலடிக்கப்பட்டுக் கூச்சலிடு கின்றவனுய்ப் பின்பு சுத்தியாகின்ருன். பிராமணர் தனத்தையும் பால் தயிர் நெய் முதலியவைகளையும் வஸ்திரங்களையும் திருடு கின்றவன் பாஷாணகுண்டத்தில் தன் ரோமத்துக் கொருவருஷம் வசித்து மூன்று ஜன்மம் வெள்ளை ரூபமுடையவனுயும் ஒரு ஜன்மம் வெள்ளைக்குறி யுடையவனுயும் பிறகு வெள்ளைப் பக்ஷியாயும் பிறந்துப் பின் ரத்தவிகாரமுள்ளவனுயும் சூலை ரோகமுள்ளவனுயும் பின் ஏழு ஜன்மம் அற்பாயுளுள்ளவனுயும் பிறந்து சுத்தியடை கிருன். வெள்ளிமயமாயும் வெண்கலமயமாயும் இருக்கும் பாத்திரத் தைத் திருடுகிறவன் தீக்ஷ்ணமான பாஷாண குண்டத்தில் ரோமத் துக் கொருவருஷம் வசித்து ஏழு ஜன்மம் குதிரையாயும் அதிக மான அவயமுள்ள பாதரோகியாயும் பிறந்து சுத்தியாவான். விபசாரி அன்னத்தைப் புசிப்பவன் அவளுடைய ஜீவனத்தினுல் ஜீவிக்கின்றவன் ரோமத்துக் கொருவருஷம் சொள்ளுகுண்டத்தில் வசித்து யமதூதர்களால் அடிக்கப்பட்டவனுய் துக்கமடைந்து கண் ரோகமும் சூலைநோயு முடையவனுய்ப் பின் சுத்தமடைகின்றனன். மிலேச்சனிடம் தொழில் செய்கின்றவனும் சிரமஜீவியும் உருக்கி விட்ட ஈயக்குண்டத்தில் ரோமத்தினளவாக வசித்து யமதண்டனை யோடு அதையேயுண்டு வசித்துப் பின் மூன்று ஜன்மம் கறுப்புப் பசுவாயும் மூன்று ஜன்மம் கறுப்பு ஆடாயும் பின் பனைமரமா யும் பிறந்து சுத்தியடைகின்றனன். தேவர்கள் பிராமணர்க ளுடைமைகளைத் திருடுகின்றவன் சூர்ணகுண்டத்தை யடைந்து நூறு வருஷம் வசித்து யமதூதராலடிக்கப்பட்டு பின் ஆடாகவும், ஏழு ஜன்மம் கோழியாகவும், பின் குரங்காகவும், பின் காசவியாதி யுள்ளவனுகவும், பின் வம்சஹீனனுகவும், தரித்திரனுகவும், அற்பாயு

ளுடையவனுகவும் பிறந்து சுத்தியாகின்ருன். பிராமணர்களுக்குச் சக்கராங்கிதஞ் செய்கிறவனும் ஹத்தியினுல் திரவியத்தைச் சம்பாதிக்கிறவனும் நூறுவருஷம் சக்கரகுண்டத்தில் வசித்து யமதண்டனையடைந்து மூன்று ஜன்மம் வாணியனுகவும் பின் வியாதியுள்ளவனுகவும் ரோகமுள்ளவனுகவும் பிறந்து சுத்தி யடைகின்ருன். பசுவினிடத்தும் பிராமணனிடத்தும் வக்ரத் தன்மையைக் காட்டுகின்றவன் வக்ரகுண்டத்தில் நூறு யுகமிருந்து பிறகு ஏழு ஜன்மம் வக்ரமான அங்கமுள்ளவனுயும் தரித்திரனுயும் வம்சமற்றவனுயும் பாரியையற்றவனுயும் பிறந்து சுத்தியடைகின்ருன். கூர்ம மாம்சத்தைப் புசிக்கிற பிராமணன் கூர்ம குண்டத்தில் நூறு வருஷம் அவைகளால் கடிக்கப்பட்டு பின் மூன்று ஜன்மம் ஆமையாகவும் பூனையாகவும் பன்றியாகவும் மயிலாகவும் பிறந்து சுசியாகின்ருன். பிராமணனது தயிர் நெய் திருடுகின்றவன் ஜ்வாலா குண்டத்தையும், பஸ்மகுண்டத்தையும் அடைந்து நூறு வருஷமிருந்து எண்ணெயினுல் காய்ச்சப்படுகிறவனுய் ஏழு ஜன்மம் மீனுகவும், எலியாகவும் பிறந்து பிறகு சுத்தமடைகின்ருன். சுகந்த தைலத்தையாவது நெல்லிக்காயையாவது வேறெந்த வாசனை திரவியத்தையாவது புண்ணிய க்ஷேத்திரமான பாரத வருஷத்தில் திருடுகின்றவன் தக்த (காய்ச்சிய) குண்டத்தில் இராப்பகலுந் தன் மயிருக்கொரு வருஷங் கொளுத்தப்பட்டு ஏழு ஜன்மம் மூஞ்செலியாயும், மூன்று ஜன்மம் கஸ்தூரி மிருகமாயும், ஏழு ஜன்மம் புனுகு பூனையாயும் பிறந்து பிறகு மனிதனுவான். பாரத வருஷத்தில் தகப்பனுர் காலமுதலாக அனுபவித்துவரும் பூமியைத் தன் பலத்தினுலாவது கபடத்தினுலாவது ஹிம்சையினுலாவது அபகரிப்பவன் தக்த சூசி (காய்ச்சிய ஊசி) குண்டத்தில் இராப்பகலுந் தபிக்கின்றவனுய்க் காய்ச்சிய எண்ணெயில் விழுந்த ஜீவன் துடிப்பது போல் துடித்து ஆகாரமற்றவனுய்க் கூவிக்கொண்டு யமதூதர்களால் அடிக்கப்பட்டு அறுபதினுயிர வருஷம் மலப்புழுவாயிருந்துப் பின் பூமியில் தரித்திரனுகப் பிறந்து துன்பமனுபவித்து மீண்டும் அந்தச் சூசிகுண்டத்திலேயே ஏழு மன்வந்தர பரியந்திரம் தபிக்கப்பட்டவனுயிருந்து பிறகு பூமியற்ற தரித்திரனுய்ப் பிறந்து துன்பத்தையனுபவித்து சுத்தனுய் பிறகு தன்னுடைய ஜன்மத்தையடைந்து சுயதர்மத்தைச் செய்யத் தொடங்குவான். கர்மானுபவ தேகமுள்ளவர் எவ்வளவு ஹிம்சையடைந்தாலும் நசிப்பதேயில்லை.

(1–127)

ஓம் லகாரார்த்தாயை நம:

## 34. நரகதண்டனைகள் (2)

தருமராஜன் கூறுகின்ருன் :—தயையற்றவனுய் ஜீவனைக் கத்தியினுல் துண்டிக்கின்றவனும் பண ஆசையினுல் மனுஷ்யனைக் கொல்லுகின்றவனும் அசிபத்ர (கத்திபோன்ற இலையுள்ள) வனத்

தில் பதினுன்கு இந்திரர் பரியந்தம் வசிப்பான். அந்தப் பாபி களுக்குள் எவர்கள் பிராம்மணனைக் கொன்ருர்களோ அவர்கள் நூறுமன்வந்தரம் வரையில் மேற்சொன்ன அசிபத்திர வனத்தில் கத்தியினுடைய கறுக்கினுல் எப்பொழுதும் வெட்டப்பட்டவராய் ஆகார மற்றவர்களாய் எம தூதர்களா லடிக்கப்பட்டவராய் நூறு ஜன்மம் புனுகு பூனையாயும், நூறு ஜன்மம் பன்றியாயும், ஏழு ஜன்மம் கோழியாயும், ஏழு ஜன்மம் நரியாயும், ஏழு ஜன்மம் புலியாயும், மூன்று ஜன்மம் செந்நாயாயும், ஏழு ஜன்மம் தவளையாயும் பிறந்து தூதர்களால் அடிக்கப்பட்டவராய், கடாவாய்ப் பிறந்து சுத்தியடைகின்றனர். பட்டணத்தையாவது கிராமத்தையாவது கொளுத்துகின்றவன் க்ஷுரதாரமென்னும் (கத்திக்கறுக்கு) குண்டத்தில் விழுந்து மூன்று யுகபரியந்தம் பாபத்தை யனுபவித்துப் பிறகு கொள்ளிவாய்ப் பிசாசாகப் பிறந்து உலகமெல்லாம் அலைந்து திரிந்து பிறகு ஏழு ஜன்மம் மலத்தைப் புசிக்கும் ஜந்துவாகவும் ஏழு ஜன்மம் புழுவாகவும் மகாசூலை நோயுடையவனுகவும் ஏழு ஜன்மம் குஷ்டரோக முடையவனுகவும் பிறந்துப் பின்னர் சுத்தியாவான். பிறனெருவன் காதில் முகத்தை வைத்துப் பிறநிந்தை செய்கின்றவனும் பிறரது தோஷத்தை வெளியிடுவதிற் சந்தோஷமுடையவனும் தேவதைகளையும் பிராமணர்களையும் நிந்திக்கிறவனும் சூசிமுக (ஊசிநுனி) குண்டத்தில் மூன்று யுகபரியந்தம் வசித்துப் பிறகு தேளாயும் பாம்பாயும் ஏழு ஜன்மம் வஜ்ரகிரீடப் புழுவாயும் ஏழு ஜன்மம் பஸ்மகீடப் புழுவாயும் பின்பெருவியாதியுள்ளவராயும் பிறந்து சுத்தியடைகின்ருர். கிருகஸ்தர் வீட்டில் ஆடுமாடுகளையாயினும் ஏனைய வஸ்துக்களையாயினும் திருடுகின்றவன் கோகாமுகத்தில் மூன்றுயுகம் தூதர்களா லடிக்கப்பட்டுப் பின் ஏழு ஜன்மம் வியாதியோடுகூடிய பசுவாகவும் மூன்று ஜன்மம் ஆடாகவும் மூன்று ஜன்மம் செம்மறியாடாகவும் நித்ய தரித்திரனுகவும் பந்து பாரியை இல்லாதவனுகவும் மனஸ்தாப முள்ளவனுகவும் பிறந்து சுத்தனுகின்ருன். சாதாரண திரவியத்தைத் திருடுகின்றவன் நக்ரமுக நரகினையடைந்து மூன்று வருஷ மிருந்து ஏழு ஜன்மம் ரோகமுள்ள பசுவாகவும் பின் மகா ரோகமுள்ள மனிதனுகவும் பிறந்து சுத்தியாகின்ருன். பசு யானை குதிரை மரம் இவைகளைக் கொல்லுகின்றவன் மூன்று யுகம் கஜதம்சம் என்னும் நரகில் தூதரால் அங்குசத்தாலடிக்கப்பட்டு மூன்று ஜன்மம் யானை குதிரையாயும் பின் துருக்கனுயும் பிறந்து சுத்தியாகின்ருன். ஜலத்தை அருந்தும் பசுவைத் தடைசெய்பவன் கோமுகாகார (கோமுகத்தின் ஆகார) முள்ளதும் புழுகுடன் காய்ச்சப்பட்ட ஜலமுள்ளதுமான நரகடைந்து ஒருமன்வந்தரம் தபிக்கப்பட்டு பசுமாடில்லாதவனுகவும் தரித்திரனுகவும் ஏழு ஜன்மம் பறையனுகவும் பிறந்து பின் சுத்தியடைகின்ருன். கோஹத்தி பிரம்மஹத்திக்குச் சமானமான பாபங்களைச் செய்கின்றவன் புணரக்கூடாத ஸ்திரீயைப் புணருகின்றவன் ஸ்திரீஹத்தி செய்கின்றவன் பிச்சையெடுப்போனைக் கொல்லுகின்றவன் கர்ப்

பத்தைச் சிதைக்கின்றவன் பதினான்கு இந்திரபதம் வரையிலும் கும்பீபாகத்தில் வசித்துத் தூதராலடிக்கப்பட்டு நெருப்பிலும் முள்ளிலும் காய்ச்சப்பட்ட எண்ணெயிலும் கொதிக்கும் ஜலத்திலும் இரும்பிலும் தாம்பரத்திலும் ஒவ்வொரு க்ஷணகாலமிருந்து ஆயிரம் ஜன்மம் கழுதையாகவும் நூறு ஜன்மம் பன்றியாகவும் ஏழு ஜன்மம் காக்கையாகவும் ஏழு ஜன்மம் சர்ப்பமாகவும் அறுபதினாயிர வருஷம் புழுவாகவும் பல ஜன்மம் குஷ்டரோகியாகவும் தரித்திரனாகவும் பிறப்பான் என்றனன். (1–23)

சாவித்திரி வினவுகின்றாள் :—பிரம்மஹத்திக்கும் கோஹத்திக்கும் சமமான பாவங்களெவை? எந்த ஸ்திரீ மானிடரால் அடையத் தகாதவள்? எவன் சந்தியைவிட்டவன்? அதீக்ஷிதனான புருஷன் யார்? தீர்த்தப் பிரதிக்கிரகம் செய்யும் பிராமணன் யார்? கிராம யாஜி யார்? விப்பிரன் யார்? தேவலகன் யார்? சூத்திரர்களுக்குச் சமையல் செய்கின்றவனும் அவர்களை மதிக்கின்றவனும் சூத்திர ஸ்திரீக்குப் பர்த்தாவாகின்றவனும் ஆகிய இவர்களுடைய அடையாளங்கள் எவை? இவைகளை விரித்துச் சொல்லுவீரென்றாள். பரப்பிரம்மத்தினிடத்தும் அவருடைய வேறு அர்ச்சாபிம்பத்தினிடத்தும் சிவம் சிவலிங்கம் சூரியன் சூரியகாந்தக்கல் கணபதி துர்க்காதேவி இவர்களிடத்தும் குரு இஷ்டதேவதை தாய் இவர்களிடத்தும், பிரம்மஞானிகளிடத்தும் விப்ரபாததீர்த்தம் சாளக்கிராம தீர்த்தங்களிடத்தும், சிவ விஷ்ணு நைவேத்தியங்களிடத்தும், சர்வேசனிடத்தும் சர்வேசரான கிருஷ்ணமூர்த்தியினிடத்தும், சர்வகாரணத்துக்கும் காரணமாயும் யாவருக்கும் முற்பிறந்தவராயும் சகல தேவர்களுக்குந் தலைவராயும் சர்வாந்தர்யாமியாயும் மாயையால் அநேக ரூபமுள்ளவராயும் நிர்க்குணராயும் ஏகரூபராயும் இருக்குங் கடவுளிடத்தும், சக்தி பக்தர்களிடத்தும் சக்திசாஸ்திரங்களிடத்தும் பேதபுத்தி செய்கின்றவரும், வேதப் பிரதிபாத்யமான பிதுர்க்கர்மங்களையும் தேவதா பூஜைகளையும் விடுகின்றவரும், பரிசுத்தமான வஸ்துக்களில் பரிசுத்தமாயும் ஞானானந்த ஸ்வரூபியாயும் அநாதியாயும் தேவர்களுக்கெல்லாம் பிரபுவாயும் இருக்கின்ற ஈஸ்வரனைப் பூஜிக்காதவரும், நிந்திக்கின்றவரும், சர்வகாரணரூபிணியாயும் காரணப்பிரம்ம ஸ்வரூபிணியாயும் சர்வசக்திசொரூபிணியாயும் யாவருக்கும் மாதாவாயும் இருக்கும் பிரகிருதிமகாதேவியை நிந்திக்கின்றவரும், கிருஷ்ண ஜன்மாஷ்டமி ஸ்ரீ ராமநவமி மஹாசிவராத்திரி ஏகாதசி ஞாயிற்றுக்கிழமை பஞ்சபருவம் இவைகளில் விரதானுஷ்டானங்களை விட்ட சண்டாளராகிய மகாபாபிகளும், அம்புவாசியால் பூமியை வெட்டுவோரும் ஜலத்தில் சௌசம் முதலியவற்றைச் செய்வோரும் குரு தாய் தந்தை பதிவிரதையான மனைவி பிள்ளை பெண் இவர்களைப் போஷிக்காதிருக்கின்றவரும், கலியாண மாகாதவரும், பிள்ளையின் முகத்தைப் பாராதவரும் ஈஸ்வரபக்தி யில்லாதவரும், ஈஸ்வரபூஜை செய்யாதவரும், ஈஸ்வரருக்கு நிவேதனமாகாத அன்னத்தைப் புசிப்பவரும், ஈஸ்வரபக்தியைச் செய்யாதவரும்,

புண்ணியமான பார்த்திவலிங்கபூஜை செய்யாதவரும், பிரம்மஹத்தி செய்தவனுக்கு ஒப்பாவர். பசி எடுத்தவனை நிவாரணஞ் செய்த வனும், பசுமத்தியிலும் பிராமணமத்தியிலும் போகின்றவனும், எருதின்மீது ஏறுகின்றவனும், கோவுக்கு எச்சிலைக்கொடுக்கின்ற வனும், அதனைத் தடியாலடிக்கின்றவனும் காலாலுதைக்கின்ற வனும், எருதின்மேலேறுகின்றவனைப் புசிப்பிக்கின்றவனும், எருதின்மேலேறுகின்றவனது அன்னத்தைப் புசிக்கின்றவனும், சூத்திரனுக்கு யாகஞ் செய்விக்கின்றவனும், அவனுடைய அன்னத்தை புசிக்கின்றவனும், நெருப்பில் பாதங்களைக் காய்ச்சு கின்றவனும் காலை அலம்பாமல் வீட்டில் நுழைகின்றவனும், எண்ணெயுள்ளகாலோடு புசிக்கின்றவனும், காலில் எண்ணெய்பூசிக் கொண்டு சயனிக்கின்றவனும், சூரியோதயத்தில் புசிக்கின்றவனும், பிள்ளையும் பர்த்தாவும் இல்லாதவளது அன்னத்தைப் புசிக்கின்றவ னும், மூன்றுசந்திகளை அனுஷ்டிக்காமலிருக்கின்றவனும், பர்த்தா விடத்திலும் தேவதையிடத்திலும் பேதத்தை நினைக்கின்ற ஸ்திரீயும், குரூரமான வார்த்தையோடு பர்த்தாவை யடிக்கின்றவளும், பசுக் கள் வருவதற்கு வழியில்லாமல் பயிரிடுகின்றவனும், தடாகத்தைக் கெடுத்துப்பயிரிடுகின்றவனும், கோட்டையில் பயிரிடுகின்றவனும், கோவதைசெய்வதற்குப் பிராயச்சித்தம் செய்துகொள்ளாதவனும், பாதுகாப்பதற்குப் புத்திரனில்லாமையாலாவது அக்ஞானத்தி னாலாவது கோவை மாற்றிவிடுகின்றவனும், பசுவைப்படைத்து அரச னாலும் தெய்வத்தாலும் வரும் ஆபத்துக்காலங்களில் அதனைக்கா வாது துன்பத்தைச் செய்கின்றவனும், தேவபிம்பங்களையும் பிராணி களையும் அக்னி ஜலம் நைவேத்தியம் புஷ்பம் அன்னம் இவைகளை யும் தாண்டுகின்றவனும், ஸம்வன் நாஸ்தி என்று வாதிக்கின்றவ னும் வஞ்சிக்கின்றவனும், பொய்யை உண்மையென்று வாதிக்கின்ற வனும், அந்தணர்களையும் குருவையும் துவேஷிக்கின்றவனும், வஞ்சிக்கின்றவனும், தெய்வரூபமான பிம்பங்களையும், குருவையும், பதிவிரதையையும் கண்டவுடன் நமஸ்காரஞ் செய்யாதிருக்கின்ற வனும், நமஸ்கரிக்கின்றவனுக்கு ஆசீர்வாதஞ் செய்யாத பிராம் மணனும், வித்தியார்த்திக்கு வித்தியாதானஞ் செய்யாதிருக்கின்ற வனும் கோஹத்திசெய்தவர்க்குச் சமானமானவரென்றறிவாயாக.

அன்றியும் மனிதர்கள் தங்கள் தங்கள் வருணத்துக்குரிய ஸ்திரீகளை அடையவேண்டுமென்று வேதவித்துக்களாலும் வேதங் களாலும் நியமனஞ்செய்திருக்க அதையெண்ணாது மாறிச்செய் வதும், சூத்திரர்கள் பிராம்மண ஸ்திரீகளையும், பிராம்மணர்கள் சூத்திரஸ்திரீகளையும் அடையக்கூடாதென்று நியமனஞ்செய்திருக்க அதை எண்ணாது அதைச்செய்வதும், செய்யக்கூடாதென்ப வற்றைச் செய்வதும் கோஹத்திசெய்த பாவத்தைக்கொடுக்குமென பெரியோர் கூறுவர். சூத்திரன் பிராம்மணஸ்திரீயை யடைந்தாலும் பிராம்மணஸ்திரீ சூத்திரனையடைந்தாலும் நூறு பிரம்மஹத்தி பலனையடைந்து இருவரும் கும்பீபாகத்தையடைவர். சூத்திரஸ்திரீ யைப் பிராமணனடைவானாகில் அவன் சூத்திரனே என்றும், அவன்

பிராமணனானாலும் பறையனிலும் நீசனாகக் கருதப்படுகிறானென் றும், பிதுர்க்களுக்கும் மற்றைய தேவர்கட்கும் அவன்கொடுக்கும் பிண்டம் விஷ்டைக்கு (அமேத்தியத்துக்குச்) சமமானதென்றும் அவன் செய்யும் தர்ப்பணம் மூத்திரத்துக்குச் சமானமென்றும், அவனாற் கொடுக்கப்பட்டவை யெல்லாம் பிதுர்க்களையும் தேவர்களை யும் அடைவதில்லை என்றும், கோடிஜன்மமாய்த் தேவதார்ச்சனை யாலும் தபசினாலும் சம்பாதிக்கப்பட்ட புண்ணியமானது சூத்திர ஸ்திரீயினிடம் வைத்தமோகத்தினால் நசித்தேபோகின்ற தென்றுஞ் சொல்லுவர். இதிற் சம்சயமில்லை. சுராபானஞ்செய்த பிராமணன் மலத்தைப் புசித்தவ னாவானென்றும், சூத்திரனு மாவானென்றும், தப்த முத்திரையினாலும் தப்தசூலத்தினாலும் கொளுத்தப்பட்ட தேகத்தையுடையவனும் ஏகாதசியில் புசிக்கின்றவனும், கும்பீபாகத் தை யடைவானென்றும், குருபத்னி ராஜபத்னி மாற்றாந்தாய் மகள் மருமகள் மாமி கர்ப்பஸ்திரீ உடன்பிறந்தாள் சகோதரன்பத்னி மாமன்பெண்சாதி தகப்பனைப்பெற்றபாட்டி தாயைப்பெற்ற பாட்டி அவளுடைய சகோதரிகள் பிதாக்களுடைய கன்னிகை சிஷ்யை சிஷ்யன்பத்னி பிள்ளையினுடைய பெண்சாதி சகோதர புத் திரனுடைய மனைவி இவர்களெல்லாம் அடையத் தகாதவரென்று பிரமதேவர் கூறுகின்றபடியால் அவர்களைக் கூடுகின்றவனும், நூறு பிரம்மஹத்தியின் பலனை யடைவானென்றும் வேதங்களிற் கூறப் பட்டிருக்கின்றது. இவரெல்லாம் ஒரு கர்மத்துக்கும் அருகரல்லர்; தொடத்தகுந்தவருமல்லர். உலகத்தாராலும் வேதத்தாலும் நிந்திக் கப்படுவர்; சிறிதேனும் கடத்தற்கரிதான கும்பீபாகத்தில் வீழ்வர். எந்தப்பிராமணன் சந்தியை அசுத்தமாகச் செய்கின்றானோ, அல் லது செய்யாமலே விடுகின்றானோ, அவன் சந்தியா ஹீனனென்று சொல்லப்படுகின்றான். வைஷ்ணவம் சைவம் சாக்கியம் சௌரம் காணபத்தியம் முதலிய சம்ஹிதைகளை அகங்காரத்தினால் சிறப்புச் செய்யாதவர்களும் மந்திரத்தை அகங்காரத்தினால் கிரகிக்காதவர் களும் அதீக்ஷிதர்களென்று சொல்லப்படுகின்றனர். பிரவாகத்தில் நாலு முழம்வரையில் எல்லையாகவைத்துக்கொண்டு நாராயணர் வசிக்கின்றபடியால் அந்த நாராயண க்ஷேத்திரத்தில் இறந்துபோ கின்றவன் விஷ்ணுபத மடைகின்றான். காசி பதரிகாஶ்ரமம் கங்கை சமுத்திரத்தோடு சேருமிடம் புஷ்கரம் ஹரிஹரக்ஷேத்திரம் பிரபா சம் காமரூபஸ்தலம் ஹரித்துவாரம் கேதாரம் மாத்ருபுரம் ஸரஸ்வதி நதிதீரம் பிருந்தாவனம் கோதாவிரி கௌசிகிநதி திரிவேணி இமா சலம் ஆகிய இந்தத் தீர்த்தங்களிலும் ஏனையதீர்த்த கட்டங்களிலும் ஆசையினால் தானம் வாங்கிக்கொள்பவன் கும்பீபாகத்தை யடை கின்றான். சூத்திரனிடம் ஊழியஞ்செய்கின்றவனும் யாகஞ்செய்கின் றவனும் கிராமபுரோகிதனும் கிராமயாஜியும் தேவதையினால் ஜீவிக் கின்றவனும் தேவலகனும் சூத்ரபாகத்தினால் சாப்பிடுகின்றவனும் சூபகாரன் என்று சொல்லப்படுவான். சந்தியக்ஞம் பூஜனம் இவை களற்றவர் பிரமத்தர் பதிதரெனப்படுவார். ஓ நல்லபெண்ணே!

சூத்திரஸ்திரீ சம்பந்தம் செய்தவனுடைய குறிகளைக் கூறினேன். குலடை முதலானவரது சாபத்தை இனிக் கூறுகின்றேன் என்றனர். (24–191)

ஓம் லதாபூஜ்யாயை நம:

## 35. நரகதண்டனைகள் (3)

தருமராஜன் கூறுகின்றான்:—கர்மநாசம் தேவசேவை இன்றி உண்டாகாது. சுத்தகர்மத்தினால் சுத்தமான சுவர்க்காதி பலனும் குத்ஸிதமான கர்மத்தினால் நரகமுமுண்டாகின்றன. ஓ பதிவிரதையே! பும்ஸலி அன்னத்தைப் புசிக்கின்றவனும், இதர ஸ்திரீயை அடைகின்றவனும், காலசூத்திர நரகில் நூறு வருஷமிருந்துபின் பிறந்து ரோகியாய் அந்தக்கருமத்தை யனுபவித்து சுத்தராகின்றனர். கணவன் ஒருவனோடிருப்பவள் பதிவிரதையென்றும், இருவரோடிருப்பவள் குலடை என்றும், மூவரோடிருப்பவள் தர்ஷணிஎன்றும், நால்வரோ டிருப்பவள் பும்சலிஎன்றும், ஐவரோடும் அறுவரோடும் இருப்பவள் வேசிஎன்றும் எழுவரோடும் எண்மரோடும் இருப்பவள் புங்கி என்றும், அதற்குமேற்பட்டவரோடு இருப்பவள் மஹாவேசி என்றும் சொல்லப்படுவர். பதிவிரதை தவிர மற்றவர்களையடைந்தவன் மச்யோதநரகினையும், இங்ஙனங் கூறிவந்தமுறைப்படி குலடை முதலிய ஸ்திரீகளை அனுபவிக்கின்றவர் முறையே நூறு நானூறு அறுநூறு எண்ணூறு ஆயிரம் பதினாயிரம் வருஷங்களாக கும்பீபாகத்தில் வீழ்ந்து யமதூதர்களால் கொடுமையான வேதனையை யடைகின்றனர். அவ்வாறனுபவிப்பதுமன்றி குலடையை யடைந்தவன் தித்திரிபக்ஷியாகவும், தர்ஷணியை யடைந்தவன் காக்கையாகவும், பும்சலியை யடைந்தவன் கோகிலமாகவும், வேசியையடைந்தவன் செந்நாயாகவும், புங்கியை யடைந்தவன் பன்றியாகவும் ஏழுஜன்மம் வரையில் பிறந்துவருவார்; மகா வேசியை யடைந்தவன் இலவம் பஞ்சுமரமாகப் பிறக்கின்றான். சந்திரசூரிய கிரஹணகாலங்களில் புசிக்கின்றவன் அன்னத்துக்கு ஒரு வருஷமாக கிருமிகந்துகம் என்னும் நரகிற்கிடந்து பூமியில் வயிற்றுநோயுள்ள பிராமணனாயும், குன்ம வியாதியுள்ளவனாயும், குருடனாயும் பல்லில்லாதவனாயும் பிறந்து பாபநிவிர்த்தியடைகின்றான். ஒருவனுக்கு வாயினால் கொடுக்கிறேனென்று சொன்ன கன்னிகையை மற்றொருவனுக்குக் கொடுக்கின்றவனும், அவளைப் பெற்றுக்கொண்டவனும், பாம்ஸகுண்டத்தில் வீழ்ந்து அதையே புசித்து நூறுவருஷம் யமதூதர்களால் அடிக்கப்படுவார். பக்தியோடு பார்த்திவலிங்கத்தைப் பூஜிக்காத பிராமணன் எனது தூதராலடிபட்டு சரசை என்னும் நரகில் வசித்து சிவனது கோபத்தினால் சூலப்புரோதமென்னும் நரகினையடைந்து அதில் நூறு வருஷங் கிடந்து ஏழுஜன்மம் துஷ்ட மிருகங்களாகவும், அதன்பின் ஏழுஜன்மம் கூலிக்குச்செய்யும் தேவபூஜகனாகவும் பிறந்து சுத்தியடை

கின்றான். பிராமணனை மிரட்டி அடங்கச்செய்கின்றவனும், பயத்தினால் நடுங்கச் செய்கின்றவனும், பிரகம்பனமென்னும் நரகில் ஒரு ரோமத்துக் கொருவருஷமாக வசிப்பர். பர்த்தாவை மிக்க கோபத்தோடு பார்க்கின்றவளும் கடுமையாய்ப் பேசுகின்றவளும், உல்காமுக நரகத்தில் ஒரு ரோமத்துக்கொரு வருஷமாக இருந்து எனது கிங்கரர்களால் வாயில் கொள்ளிக்கட்டை வைக்கப்பட்டும் தலையில் தடியினாலடிக்கப்பட்டும் பெருந்துன்பத்தை அனுபவித்து ஏழு ஜன்மம் வரையில் அமங்கலியாய்ப் போதலாகிய வைதவ்யத்தை யடைந்து வியாதியோடிருந்து பின் சுத்தியாகின்றனர். சூத்திரனை அனுபவிக்கும் பிராம்மண ஸ்திரீயானவள் நன்றாய்க் காய்ச்சப்பட்ட சௌசநீரை யுடைத்தானதாயும், இருளடைந்ததாயும் இருக்கும் அந்தகூபம் என்னும் கிணற்றில் கிடந்து இரவும் பகலும் அதிலுள்ள நீரைக்குடித்து தூதரா லடிக்கப்பட்டு இவ்வண்ணம் பதினான்கு இந்திரர் வரையில் அனுபவித்து, பின் ஆயிரம் ஜன்மம் பெண்காக்கையாகவும், பின் நூறு நூறாகப் பெண்பன்றியாகவும், பெண் நரியாகவும், பெட்டைக்கோழியாகவும், அதன்பின் எவ்வேழு ஜன்மம் பெட்டை புறாவாகவும், பெண்குறங்காகவும், அதன்பின் சண்டாள ஸ்திரீயாகவும், வண்ணாத்தியாகவும் க்ஷயரோகமுள்ளவளாகவும், பும்சலியாகவும், குஷ்டரோக முள்ளவளாகவும், பின் வாணிச்சியாகவும் பிறந்து சுத்தியாவாள். வேசி வேதனம் என்னும் நரகிலும், புங்கி தாடனம், தண்டம் என்னும் நரகிலும், மஹா வேசி சாலாந்தர மென்னும் நரகிலும், குலடை தேவசூர்ணத்திலும், தன்னிஷ்டப்படி நடக்கின்றவ ளென்னும் சுவைரிணி தனனமென்னும் நரகிலும், தர்ஷணி சோஷ்பனம் என்னும் நரகிலும் கிடந்து தூதர்களா லடிக்கப்பட்டு ஒருமன்வந்தரம் வரையில் மலமூத்திரங்களையுண்டு, பின் லக்ஷம் வருஷம் மலப்புழுக்களாய்ப் பிறந்து சுத்தியடைவர். நான்கு வருணத்தவரும் தத்தமக்குரிய வருணத்திலேயே பரஸ்திரீகளைக் கூடினவர் கஷம் என்னும் நரகிற்றள்ளப்பட்டு, பன்னிரண்டு வருஷம் அந்நீரைக் குடித்துப் பின்னர் சுத்தியாவார்கள். இதுபோலவே ஸ்திரீகளும் தத்தம் வருணத்தில் பரபுருஷரை விரும்புவார்களாயின் அவர்களும் அந்தக்கதியையே யடைவார்கள். க்ஷத்ரிய வைசியர் பிராம்மண ஸ்திரீயை விரும்புவார்களாயின் அவர்கள் தாயைப் புணர்ந்த பாபிகளைப்போலாகிப் பதினான்கு இந்திரர் வரையில் சூர்ப்பநரகிற்கிடந்து சூர்ப்பாகாரமான புழுக்களால் கடிக்கப்பட்டு, காய்ச்சிய மூத்திரத்தைக் குடித்து என் தூதரால் அடிக்கப்பட்டு, துன்பமடைந்து பின் ஏழு ஜன்மம் பன்றியாயும் ஏழு ஜன்மம் சூத்திரராயும் பிறந்து சுத்தியாவார். கையில் துளசியை வைத்துக்கொண்டு பிரதிஜ்ஞை செய்ததைத் தவறிப் பொய்ச் சத்தியம் செய்கின்றவனும், கங்காஜலத்தையாவது, தேவதா பிம்பத்தையாவது தேவதா சிலையையாவது கையில் வைத்துக்கொண்டு பிரதிஜ்ஞை செய்தபடி செய்யாது விட்டவனும், வலக்கையால் பிராம்மணன் பசு நெருப்பு இவைகளைத் தொட்டும் தேவாலயத்திலிருந்தும் பிரதிஜ்ஞை செய்ததைக் காப்பாற்றாதவரும், மித்திரத்

துரோகிகளும், நன்றி மறந்தவர்களும், நம்பியிருந்தவரைக் கொல்லுகின்றவரும், ஜ்வாலாமுகி என்னும் நரகிற் பதினன்கு இந்திரர் வரையிற் கிடந்து நெருப்புத்தழலால் கொளுத்தப்பட்டு தூதராலடிக்கப்படுவர். துளசியைத்தொட்டுச் சபதஞ்செய்து அதைத் தவறினவர் ஏழு ஜன்மம் சண்டாளராகவும் அதேபோல் கங்கையைத் தொட்டுத் தவறினவர் ஐந்து ஜன்மம் துருக்கராகவும் தேவசிலையைத் தொட்டுத் தவறினவர் ஏழு ஜன்மம் மலப்புழுவாகவும், தேவபிம்பத்தைத் தொட்டுத் தவறினவர் ஏழு ஜன்மம் பிரமர கிருமியாகவும், வலக்கையைத் தொட்டுத் தவறினவர் ஏழு ஜன்மம் சர்ப்பமாகவும், தேவாலயத்தில் சத்தியத்தைச் சொல்லித் தவறினவர் ஏழு ஜன்மம் கூலிக்குத் தேவபூஜை செய்கிறவராகவும், பிராமணன் முதலானவர்களைத் தொட்டுத் தவறினவர் ஏழு ஜன்மம் புலியாகவும், மூன்று ஜன்மம் செவிடாகவும், ஊமையாகவும், பந்துக்கள் பரம்பரையும் வம்சபரம்பரையும் அற்றவராகவும் பிறந்து சுத்தராகின்றனர். மித்திரத்துரோகஞ் செய்தவன் கீரிப்பிள்ளையாகவும், நன்றிமறந்தவன் முட்செடியாகவும், விசுவாசமுடையவனைக் கொன்றவன் ஏழு ஜன்மம் புலியாகவும், பொய்சாக்ஷிசொன்னவன் ஏழு ஜன்மம் தவளையாகவும் பிறந்து சுத்தமடைகின்றனர்.

நித்திய கர்மத்தை விட்டவன் தனது குலத்தில் முன்னேழு சந்ததிகளையும், பின்னேழு சந்ததிகளையும் கெடுக்கின்றவனும் ஜடத்தன்மையனுய்க் காணப்படும் பிராம்மணனும் வேதவாக்கியங்களில் நம்பிக்கையற்றவனும் விரதாதிகளை விட்டவனும் சத்புருஷாளுடைய சொற்களை நிந்திக்கின்றவனும் வீணுகச் சிரித்துக்கொண்டிருக்கின்றவனும் பிறரைக் காரணமில்லாமல் தூஷிக்கின்றவனும் உலகிற்றடுமாறித் திரிந்து பின் தூமாந்த நரகில் நூறுவருஷம் வீழ்ந்து கிடந்து அங்கு புகையைத்தின்று மறுபடி நூறுஜன்மம் மீன் முதலான ஜலஜந்துக்களாகப் பிறந்து சுத்தியடைவான். தேவப்பிராமணனைப் பரிகசிக்கின்றவன் தன் குலத்திலிருந்த பத்து தலைமுறை முன்னோர்களையும் பத்து தலைமுறை பின்னோர்களையும் நரகிற்றள்ளினவனும்த் தானும் புகையினு லிருளடைந்த முற்கூறிய நரகத்தையடைந்து புகையினால் பீடிக்கப்பட்டவனும் அதனையே புசிக்கின்றவனும் நானூறு வருஷம் வசித்து ஏழு ஜன்மம் எலியாய்ப்பிறந்து பலவித பக்ஷி புழு விருக்ஷம் மிருகங்களாகவும் பிறந்து பின் மனிதனுகப் பிறக்கின்றான். பிராமணனுகப் பிறந்து சோதிஷத்தினாலும் வைத்தியத்தினாலும் அரக்கு முதலிய லோகங்களையும் பழரசங்களையும் விற்பதினாலும் ஜீவிக்கின்றவன் நாகவேஷ்ட நரகில் சர்ப்பங்களால் சுற்றப்பட்டவனும் ரோமத்துக்கொருவருஷம் வசித்துப் பின் பக்ஷிகளாய்ப் பிறந்து ஏழு ஜன்மம் கணக்கனுகவும், வைசியனுகவும், இடையனுகவும், வேலைக்காரனுகவும் பிறந்து பின் சுத்தியாகின்றான். ஓ பதிவிரதையே ! பிரசித்தமாயிருக்கின்ற நரககுண்டங்களையும் அதில் வீழத்தக்க பிரசித்தமான பாபிகளையுங் கூறினேன். இன்னும் பிரசித்தியற்ற அநேக சிறு

ஒன்றையனுஷ்டித்துச் செய்வானுகில் இஷ்டசித்திகள் சித்திக்கு மென்பதில் சம்சயமில்லை. ஒவ்வொரு விரதத்துக்கும் மத்யான போஜனமாவது ராப்போஜனமாவது முன் மூன்றுநாள் செய்ய வேண்டும்.

ஓ நாரதரே! அன்னியருக்குத் தெரிவிக்கக்கூடாததாயும் வேத சாரமாயும் அதிரகசியமாயும் சர்வபாப நாசகரமாயும் எல்லாப் பலன்களையுங் கொடுப்பதாயுமுள்ள தேகசோதன பூர்வகமான புரச்சரணக்கிரமத்தைக் கூறினேன் என்றனர்.

ஓம் அமிர்தார்ணவ மத்யஸ்தாயை நம:

## 24. சாந்திகள்

நாரதர், இதுபோலவே சாந்தியாதி கிருத்யங்களையும் சொல்லி யருளவேண்டுமென்று வினவ, நாராயணர் அதிரகசியமாயுள்ளதும் துஷ்டர்களுக்கும் தூஷணர்களுக்கும் சொல்லக்கூடாததுமான நீர் கேட்ட சாந்தியைச் சொல்லுகின்றேனென்றனர். பூத பைசாச பயங்களுக்கும் பாதகங்களுக்கும் வன்னிசமித்தினுல் ஹோமஞ் செய்தால் நிவாரணமாகும். பாலுள்ள விருக்ஷங்களின் ஈர சமித்துக்களால் ஹோமஞ்செய்தாலும் சூரிய சம்பந்தமான திக்கு களைச் சொல்லி ஜலத்தில் தர்ப்பித்தாலும் முழங்கால் ஜலத்தினின்று ஜபித்தாலும் பூதரோகங்கள் நிவிர்த்தியாகும். கழுத்தளவு ஜலத்தி னின்று ஜபித்தால் பிராண சந்தேகமான பாபம் நிவிர்த்தியாகும். ஸ்வர்ணம் வெள்ளி தாமிரம் பாலுள்ளமரம் இவைகளினுற் செய்த பாத்திரங்களிலாவது மண்பாத்திரங்களிலாவது பஞ்சகவ்யம் சேர்த்து அதற்குரிய மந்திரமும் ஜபித்து இடதுகையில் பிடித்துக் கொண்டு ஜ்வலிக்கின்ற அக்னியில் பாலுள்ள மரங்களின் சமித்துக் களை பஞ்சகவ்யத்தில் தோய்த்து ஆயிரம் ஆகுதி செய்து தர்ப்பை யினுல் அப்பஞ்சகவ்யத்தைத் தொட்டு பூதாதிகளால் பீடிக்கப் பட்டவர்கள் மீதிலாவது வீடுகள் முதலிய இடங்களிலாவது மந்திரங்களைச் சொல்லித் தெளித்தால் நிவிர்த்தியாகும். பிறகு தேவியைத்தியானித்து பலி முதலியவைகளைக் கொடுக்கவேண்டும். அப்பலியினுல் நிவிர்த்தியாகும் வீடு கிராமம் பட்டணம் ராஜதானி இவ்விடங்கள் தோஷமடைந்திருந்தாலும் இதனுல் நிவிர்த்தியாகும்.

சுவர்ணம் வெள்ளி தாமிரம் மண் இவைகளாற் செய்யப்பட்ட கும்பங்களை நூலினுற் சுற்றி நான்கு திக்குகளிலிருந்து கொண்டு வந்த ஜலத்தினுல் பூரித்து மணலில் மண்டலஞ்செய்து தான்யங் களைப் பரப்பி அதன்மீது கும்பத்தை வைத்து ஏலம் சந்தனம் கர்ப்பூரம் ஜாதிபுஷ்பம் பாதிரி மல்லிகை பில்வபத்திரம் இவைகளை அதிற்சேர்த்துப் பாலுள்ள விருக்ஷங்களின் தளிர்களை அதன் முகப் பில் வைத்து கூர்ச்சங்களிட்டு நியமமுள்ள மூன்று பிராம்மணர் களைக் கொண்டு ஆயிரம் உரு பூஜா பூர்வமாக ஜபஞ் செய்வித்து அத்தீர்த்தத்தால் பூதாதிகள் பிடித்த மனுஷ்யனுக்கு அபிஷே கித்தால் நிவிர்த்தியாய்ச் சுகமடைவான். மிருத்யுரோகங்களும்

நிவிர்த்தியாகும். அரசன் செய்தால் தீர்க்கமான ஆயுளையடைவான். ஜபஞ்செய்த மூன்று பிராம்மணர்களுக்குச் சந்துஷ்டியாய் சக்திக் குத்தக்கபடி மரியாதை செய்யவேண்டும்.

குடுசி என்னும் சமித்தைப் பாலில் தோய்த்து ம்ருத்யுஞ்ஜய மந்திரத்தினுல் ஓமித்தால், சர்வவியாதியும், மாந்தளிரைப் பாலில் தோய்த்து ஓமித்தால் ஜுரமும், மாந்தளிரையாவது சோமலதை என்கிற கொடியைக் கணுக்கள்தோறும் ஒடித்தாவது பாலில் தோய்த்து சூரிய மந்திரத்தால் ஓமித்தால் க்ஷயமும், தேன் நெய் சர்க்கரையால் ஓமித்தால் வெண்குஷ்டமும், சூரியன்பொருட்டு பாயசமாவது அவிசாவது நிவேதித்து ஓமித்து சேஷத்தைப் புசித்தால் ராஜக்ஷயமும், சங்கவிருக்ஷ புஷ்பத்தால் ஓமித்தால் குஷ்டரோகமும், நாயுருவி அரிசியினுல் ஓமித்தால் அபஸ்மார வியாதியும், பாலுள்ள மரசமித்துக்களால் ஓமித்தால் உன்மாதமும், அத்தி சமித்தினுல் ஓமித்தால் மேக வியாதியும், தேன் கருப்பஞ் சாறுகளால் ஓமித்தால் பிரமேக வியாதியும், மது த்ரயத்தாலும் கபிலைப்பசுவின் நெய்யாலும் ஓமித்தால் வைசூரியும், அத்தி ஆல் அரசு இவைகளினுல் ஓமித்தால் பசு யானை குதிரை இவைகளின் வியாதியும் நீங்கும்.

வீட்டில் தேன்கூடு புற்று உண்டாகுமானுல் வன்னிசமித்து நெய் அன்னம் இவைகளால் ஓமித்தால் தோஷ நிவிர்த்தியாகும். மேக இடியினுலும் பூகம்பங்களாலும் உண்டாகிற பயம் ஏழு நாள் சீந்தல்கொடியினுல் ஓமித்தால் நிவிர்த்தியாகி ராஜதானி முதலான வைகளும் சுகமடையும். காற்று அக்னி சத்துரு இவைகளால் உண்டாகும் பயம் மண்கட்டிகளை நூறு உரு ஜபித்து நான்கு திக்குகளிலும் இறைத்தால் நீங்கும். விலங்கு முதலியவற்ருல் கட்டுண்டவன் நூறு உரு ஜபித்தால் கட்டுகள் விலகிவிடும். விஷ ரோகம் பூதரோகமுள்ளவர்களைத் தொட்டுக்கொண்டு நூறு உரு ஜபித்தால் நீங்கிவிடும். ஜலத்தை மந்திரித்துண்டாலும் விபூதியை மந்திரித்து சிரசில் தரித்துக்கொண்டாலும் பூதாதி ரோகங்களும் சமஸ்தமான வியாதிகளும் நீங்கித் தீர்க்காயுளுண்டாகும்.

புஷ்ப ஹோமங்களைப் பிராமணமுகமாகச் செய்து அவர்களைத் தன் சக்திக்குத் தக்கபடித் திருப்தி செய்வித்தால் சம்பத்துண்டா கும். செந்தாமரையாலாவது ஜாதி புஷ்பத்தாலாவது சாலிதண்டு லத்தாலாவது பில்வசமித்துக்களாலாவது பில்வபத்திரங்களா லாவது பில்வ புஷ்பங்களாலாவது பில்வபலங்களாலாவது பாயசம் நெய் இவைகளில் தோய்த்து ஏழுநாள் ஓமஞ்செய்தால் சம்பத்துண் டாகும். நெற்பொரியை நெய் தேன் கருப்பஞ்சாறு என்னும் மதுக் களோடு சேர்த்து ஓமித்தால் வரனுக்கு விரும்பிய கன்னிகையும் கன்னிகைக்கு விரும்பிய வரனுங் கிடைப்பார்கள். செங்கழுநீர் புஷ்பங்களினுல் ஏழுநாள் ஓமித்தால் சுவர்ணமும், சூரியனைக் குறித்து அர்க்கியங் கொடுத்தால் மறைந்திருக்கும் பொன்னும், அன்னத்தால் ஓமித்தால் அன்னமும், நெற்கதிரால் ஓமித்தால் மிக்க தானியமும் கரீஷசூர்ணங்களால் ஓமித்தால் பசுக்களும் கிடைக்கும்.

பிரியங்கு தண்டுலத்தினுல் செய்த பாயசத்தை நெய்யோடு ஓமித்தால் பிரஜைகள் விருத்தியடைவர். சூரியனைக் குறித்து அன்னம் பாயசம் இவைகளை நிவேதித்து ஓமித்து சேஷத்தை புஷ்பவதி யான ஸ்திரீ நான்காம்நாள் ஸ்நானஞ் செய்தபின் போஜனம் செய் வாளாகில் சுபுத்திரனைப் பெறுவள்.

குருத்துள்ள உலராத சமித்துக்களாலாவது குருத்தோடு கூடிய பாலுள்ள விருக்ஷ சமித்துக்களை மதுத்திரயங்களோடாவது பொன்னிற் செய்த மலர் அரும்புகளாலாவது ஓமித்தால் ஆயுள் விருத்தியடையும். நெற்கதிரினுல் நூறு ஓமமியற்றினுல் ஆயுளும் பொன் முதலியவைகளுமுண்டாகும். பால் தேன் நெய் இவைகளா லாவது வன்னி அன்னம் பால் நெய் இவைகளாலாவது கல்லால மரத்தின் சமித்து பால் இவைகளாலாவது ஏழுதினம் நூறு ஓமஞ் செய்தால் அபமிருத்யு நிவாரணமாகும். பாலையாகாரமாகக் கொண்டு மிருத்யஞ்ஜய மந்திரத்தினுல் ஏழுநாள் ஜபம் செய்தால் ஜயப்பிரத மும், நிராகாரனுயும் மௌனியாயும் மூன்றுநாள் ஜபித்தால் யமபய நிவிர்த்தியும் உண்டாகும். ஜலத்தில் மூழ்கி ஜலத்தில் நின்று ஜபிப்பானுகில் அக்கணமே மிருத்யுவினின்றும் விடுபடுகின்றுன். பில்வமரத்தடியில் ஒருமாதம் ஜபித்தால் ராஜ்ய சம்பத்தையும் பில் வத்தளிர் வேர் பழம் இவைகளால் ஓமித்தால் ராஜ்யத்தையும், நூறு பத்மத்தினுல் ஒருமாதம் ஜபித்தால் ராஜ்யாதிபத்தியத்தையும், யாவகு என்னும் தான்யத்தை கதிரோடு ஓமித்தால் கிராமாதிபத்தி யத்தையும், அரசமரத்தின் சமித்துக்களால் ஓமித்தால் யுத்தத்தில் ஜயமடைந்து அரசத் தன்மையையும், எருக்கு சமித்துக்களால் ஓமித்தால் மண்டலாதிபத்யத்தையும் அடையலாம். வஞ்சியினது பத்திர புஷ்பங்களைப் பாலிலும் பாயசத்திலும் தோய்த்து ஏழுநாள் நூறு ஹோமஞ் செய்தாலும் நாபியளவு ஜலத்தில் ஏழுநாள் ஜபித் தாலும் புஷ்டியடைகிறுன். ஜலத்தில் பஸ்மத்தை நூறு ஆகுதி செய்தால் அதிக மழை சமனமாகும். முருக்கு மரசமித்தினுல் ஓமித்தால் பிரம்மதேஜஸும், முருக்குமர புஷ்பம் ஓமித்தால் எல்லா இஷ்டகாமியங்களும் பாலால் ஓமித்தால் ஞானவிருத்தியும், நெய்யி னுல் ஓமித்தால் புத்தி விசேஷமும் உண்டாகும். ஜலத்தை அபி மந்திரித்துப் பானஞ் செய்தால் பிரமக்ஞானமும், புஷ்பங்களினுல் ஓமித்தால் வஸ்திராதிகளும் உண்டாகும். உப்பை தேன்கலந்து ஓமித்தால் இஷ்டம் தானே செய்தவனையடையும்; பில்வபுஷ்பங் களை தேனில் தோய்த்து ஓமித்தால் இஷ்டத்தை உடனே அடை கிறுன்.

ஜலத்தில் நின்றுகொண்டு கையால் ஜலத்தையெடுத்து ஸ்நானஞ் செய்வானுகில் சிரேஷ்டமான புத்தி ஆயுள்விர்த்தி நிச் சிந்தை இவைகளையடைகிறுன். இந்த ஸ்நானத்தை ஒருவருக் காகச் செய்தாலும் தானும் அவனும் பலத்தையடைவார்கள்.

பரிசுத்தமான இடத்தில் ஒருமாதம் ஆயிரம் உரு நாளொன் றுக்கு ஜபித்தால் ஆயுள்விர்த்தியும், இரண்டுமாதம் ஜபித்தால்

ஆயுளும் ஆரோக்கியமும், மூன்றுமாதம் ஜபித்தால் அவ்விரண்டு டன் சம்பத்தும், நான்குமாதம் ஜபித்தால் அம்மூன்றுடன் புத்திரர் பத்தினி கீர்த்தி இவைகளும், ஐந்துமாதம் ஜபித்தால் புத்திரன் பத்தினி ஆயுள் ஆரோக்யம் சம்பத்து வித்தையுமுண்டாகும். இவ் வாறு மாதம் வளர வளர சம்பத்துக்களும் விருத்தியடைகின்றன.

கையையுயர்த்தி ஒரு பாதத்தில் நின்று நிராசையாக ஒரு மாதம் முந்நூறு உரு தினந்தோறும் ஜபித்தால் இஷ்டங்களெல்லா மடைகிருன். ஆயிரத்து நூற்றெட்டுரு ஜபித்தால் எல்லாம் உண் டாகிறது. நிச்சல புத்தியாக ஆயிரம் உரு ஜபித்தால் ஒரு மாதத்தில் மோக்ஷமுண்டாகும். மூன்று லக்ஷம் ஜபித்தால் எல்லாம் சித்தி யாகும்.

ஒருமாதம் நீரில்மூழ்கி நூறு உரு ஜபித்தால் இஷ்டகாம்யங் களும், மூன்று லக்ஷம் உரு ஜபித்தால் சர்வமுமுண்டாகின்றன. ஜலத்தில் ஏகபாதனுய் நின்று கையை மேலேயுயர்த்தி நிராசை யுடையவனுய் ராத்திரியில் உப்பில்லாத போஜனமுடையவனுய் ஒரு வருஷம் ஜபித்தால் ரிஷியாகின்றுன். இரண்டு வருஷம் ஜபித் தால் வித்தையும், மூன்று வருஷம் ஜபித்தால் திரிகாலஞானமும், நான்கு வருஷம் ஜபித்தால் மகாதேவப்பிரத்யக்ஷமும், ஐந்து வருஷம் ஜபித்தால் அணிமாதிகுணங்களும், ஆறு வருஷம் ஜபித் தால் எவ்விதரூபம் எடுக்க எண்ணமோ அவ்விதமானரூபம் எடுக்கும் வன்மையும், ஏழு வருஷம் ஜபித்தால் தேவதாரூபமும், ஒன்பது வருஷம் ஜபித்தால் மனுத்வமும், பத்து வருஷம் ஜபித்தால் இந்திரத்துவமும், பதினொருவருஷம் ஜபித்தால் பிரஜாபதித்வமும், பன்னிரண்டு வருஷம் ஜபித்தால் பிரமத்வமும் உண்டாகும். இப்படிப்பட்ட தவங்களைப்புரிந்து எல்லாவற்றையும் அடை கின்றனர். சில ரிஷிகள் கனிகளையும் சிலர் மூலங்களையும் சிலர் சருகுகளையும் சிலர் பால் சிலர் நெய் சிலர் சோமபானம் சிலர் பிக்ஷான்னம் அவிசு இவைகளையுண்டு எல்லாவற்றையும் அடை கிருர்கள்.

சுவர்ணம் திருடல் சுராபானம் குருபத்தினி கமனம் ஆகிய இப்பாவங்கள் ஒவ்வொன்றுக்கு ஒரு மாதம் நாள் ஒன்றுக்கு மூவாயிரம் உரு ஜபித்தால் நீங்கும். இஃதேபோல் வனத்தில் குடிசையிலிருந்து ஒரு மாதம் ஜபித்தால் பிரம்மஹத்தி தோஷம் நீங்கும். பன்னிரண்டு நாள் ஜலத்தில் மூழ்கி தினம் ஆயிரம் உரு ஜபித்தால் சகலபாவங்களும் நீங்கும். நியமமாயும் மௌனியாயும் ஒரு மாதம்வரையில் பிராணுயாமத்தோடு மூவாயிரம் உரு ஜபித்தால் மகாபாதகநிவிர்த்தி யுண்டாகும்; ஆயிரம் பிராணுயாமத்தால் பிரம்மஹத்தி நீங்கும். ஆறுதரம் ரேசகபூரகங்களை அப்பியாசஞ் செய்வது ஒரு பிராணுயாமமாகும். இது சர்வபாபத்தையும் போக்கும். ஆயிரம்முறை ஒரு மாதத்துக்குள் அப்யசித்தால் ராஜஹத்தி நீங்கும். தனித்தனி பதினுயிரம் உரு காயத்திரி ஜபஞ் செய்தால் சேரக்கூடாத ஸ்திரீகளோடு சேர்ந்ததும் திருடியதும் கொலைசெய்ததும் புசிக்கக்கூடாததைப் புசித்ததும் ஆகிய

பாவங்கள் நீங்கும். நூறு பிராணுயாமம் செய்தால் சகல பாவமும் நீங்கும். ஒரு மாதம் வனத்தில் உபவாசமாய் ஆயிரம் பிராணுயாம அப்பியாசமும், மூவாயிரம் காயத்திரி ஜபமுஞ்செய்தால் சகல பாவமும் நிவர்த்தியாகும். பிராணுயாம அப்பியாசத்தை இருபத்து நான்காயிரம் செய்தால் கிருச்ரம் என்றும், அறுபத்து நான்காயிரம் சாந்திராயணத்திற்குச் சமானமென்றுஞ் சொல்லப்படும். உதயாதி சந்திகளில் நூறு பிராணுயாம அப்பியாசமும், நூறு காயத்திரி ஜபமும் செய்தால் சர்வ பாவமும் நாசமடையும். இப்போது கூறியவைகள் யாவும் சாந்தி கர்மசுத்தியென்று சொல்லப்படும். இவை ரகசியங்களுள் அதிரகசியமான படியால் நீ பாதுகாத்தல் வேண்டும். இதுவரையில் ஆசாரக்கிரமத்தைச் சுருக்கமாகச் சொல்லி வந்தேன். இதனை விதிப்படி செய்தால் துர்க்காதேவி சந்தோஷித்து பிரசன்னமாவாள். நித்ய நைமித்திக காம்யகர்மங் களை விதிப்படி அனுஷ்டித்து வந்தால் புத்திமுக்திப்பிரயோஜன முண்டாகும். ஆசாரந்தான் முதலாயுள்ள தருமம்; அதற்குத்தலைவி ஈஶ்வரியே; இவ்வாறு சகல சாஸ்திரங்களிலுஞ் சொல்லப்பட்டிருக் கிறது. இச்சதாசாரத்துக்கு மகத்தான பலனுண்டு. ஆசார முடையவன் எப்போதும் பரிசுத்தனுயும் சுகமுடையவனுயு மிருப்பான். அவனே எப்போதும் தன்யன். இது சத்யம். நாரதரே! தேவியினது பிரசாதத்தை யுண்டுபண்ணுகிற சதாசாரக் கிரமத்தை எவன் கேட்கின்ருனே அவன் இகலோக பரலோக மகா சம்பத்தையும் சௌக்கியத்தையும் உடையவனுயிருப்பன். இது காறும் சதாசாரக்கிரமாதி மகிமைகளைக் கூறினேன். இனி எதனைக் கேட்க விரும்புகின்றனை யென்றனர். (1–100)

பதினொன்ரும் ஸ்கந்தம் முற்றிற்று.

## பன்னிரண்டாம் ஸ்கந்தம்

कम्पातीर चराणां करुणाकोर कितदृष्टिपातानाम्
केलीवनंमनोमेकेषांचिद्भवतु चिद्विलासानाम् ॥

கம்பாதீரசராணும் கருணுகோரகித த்ருஷ்டி பாதாநாம் |
கேலீவநம் மநோமே கேஷாம் சித்பவது சித்விலாஸாநாம் ||

ஓம் அஜிதாயை நம:

### 1. காயத்திரி

நாதர் கூறுகின்ருர் :—ஓ தேவ ! தேவரீரால் சதாசாரவிதியைக் கேட்டதேயன்றி சர்வபாபங்களையும் போக்கவல்லதாயும் ஒப்பில்லாத மகத்துவமுடையதாயுமுள்ள தேவியினது கதாவமிர்தம் உமது முகமாகிய தாமரையினின்றும் பெருகிவரக் கண்டேன். சாந்திராயண விரதத்தை முதலாகவுடைய எந்த விரதங்கள் சொல்லப்பட்டிருக்கின்றனவோ அவையெல்லாம் ஒருவனுல் சாதித்தற்கு அருமையுடைத்தென்றும் கஷ்டத்தினுல் சாதிக்கத்தக்க தென்றும் அறிகிறேன். ஆகையினுல் பிராணிகளுக்குச் சுகமான சாதனத்தால் சாதிக்கக் கூடியதாயும் தேவி அனுக்கிரகங் கிடைக்குமாறு செய்வதாயும் சுகமான அனுஷ்டானத்தினுல் சித்திப்பதாயுமுள்ள கர்மா எதுவோ அந்தக் கர்மாவைக் கிருபையினுல் சொல்லுவீராக. ஓ சுவாமி ! சதாசாரவிதியில் காயத்திரிக்கு எந்த விதி சொல்லப்பட்டிருக்கின்றதோ அந்த விதியில் முக்கியமாயுள்ளது எதுவோ அதுவும், அதிக புண்ணியத்தைக் கொடுக்கத்தக்கது எதுவோ அதுவும், தத்துவ சங்கையாகச் சொல்லப்பட்ட காயத்திரி வர்ணங்கள் எவைகளோ அவைகளும், அவைகளுக்குரிய ரிஷிகளும் சந்தஸுகளும் தேவதைகளும்ஆகிய இவைகளெல்லாம், ஓ பிரபுவே! எனக்குச் சொல்லுவீராக. இவைகளைக் கேட்கவேண்டுமென்னும் ஆவலானது என் மனதில் அதிகமாக விருக்கின்றது என்ருர்.

நாராயணர் கூறுகின்ருர் : பிராம்மணனுனவன் இதரமான அனுஷ்டானங்களைச் செய்தாலும் செய்யாதுவிட்டாலும் காயத்திரியை மாத்திரம் விடாது செய்வானுயின் அவன் கிருதகிருத்யனுகின்ருன். சந்தியா காலங்களில் அர்க்கியங்கொடுத்து காயத்திரியை மூவாயிரம் ஜபிப்பானுயின் அவன் தேவர்களால் பூஜிக்கப்படுகிருன். நியாசங்களைச் செய்தாலும் செய்யாவிட்டாலும் காயத்திரியை மாத்திரம் ஜபித்தல்வேண்டும். அந்தக் காயத்திரி ஜபத்தைச் சச்சிதானந்த ரூபிணியா யிருக்கின்ற தேவியைத் தியானித்து பலாபேக்ஷையின்றிச் செய்வானுயின் அந்தக் காயத்திரியின் ஒரு அக்ஷர சித்திக்கே மும்மூர்த்திகளுக்கும் சோம சூர்யாக்னிகளுக்கும் சமானமாகுந்தன்மையை அந்தப் பிராமணன் அடைகின்ருன். ஓ முனிவரே ! இனிக் காயத்திரி வர்ணத்துக்குரிய ரிஷி சந்தஸ் தேவதை இவைகளை உண்மையாய் முறைப்படிச் சொல்லுகிறேன் கேட்பீராக.

### ரிஷிகள்

வாமதேவர், அத்திரி, வசிஷ்டர், சுக்ரர், கண்ணுவர், பராசரர், விஸ்வாமித்திரர், கபிலர், சௌநகர், யாக்ஞவல்கியர், பரத்துவாஜர், ஜமதக்னி, கௌதமர், முத்கலர், வேதவியாசர், லோமசர், அகஸ்தியர், கௌசிகர், வத்ஸர், புலஸ்தியர், மாண்டுகர், துர்வாசர், நாரதர், கஸ்யபர் இந்த இருபத்து நால்வரும் வர்ணங்களுக்குரிய ரிஷிகளாக சொல்லப்படுகின்றனர்.

### சந்தஸுகள்

காயத்திரி உஷ்ணிக் அனுஷ்டுப் ப்ருஹதி பங்தி திரிஷ்டுப் ஜகதீ அதிஜகதி சக்வரீ அதிசக்வரீ திருதி அதிதிருதி விராட் பிரஸ் தாரபங்க்தி கிருதி பிருகிருதி ஆகிருதி விக்ரிதி சங்கிருதி அக்ஷர பங்க்தி பூ: புவ: ஸ்வ: ஜோதிஷ்மதீ இந்த இருபத்து நான்கும் சந்தஸுகளாகச் சொல்லப்படுகின்றன.

### தேவதைகள்

ஆக்னேயம் பிராஜாபத்தியம் ஸௌம்யம் ஈசானம் சாவித்திரம் ஆதித்யம் பார்ஹஸ்பத்யம் மைத்ராவருணம் பகதெய்வதம் ஆர்யமைஸ்வரம் கணேசம் துவாஷ்ட்ரம் பௌஷ்ணம் ஐந்தி ராக்னம் வாயவ்யம் வாமதேவ்யம் மைத்ராவருணி வைஸ்வ தேவம் மாத்ருகம் வைஷ்ணவம் வததெய்வஸும் ருத்ரதெய்வதம் கௌபேரம் ஆஸ்வினம் மகாபாபங்களைப் போக்கடிப்பதாயும் பரம சிரேஷ்டமாயுமுள்ள இந்த இருபத்து நான்கும் தெய்வங்களாகச் சொல்லப்படுகின்றன. இவைகளைக் கேட்ட மாத்திரத்தில் சாங்க மாகக் காயத்திரியை ஜபஞ் செய்தால் எந்தப் பலனுண்டாகுமோ அந்தப் பலனுண்டாகும். (1–27)

ஓம் அபராஜிதாயை நம:

## 2. சக்தி–வர்ண–தத்வ முத்திரைகள்

நாராயணர் கூறுகின்றார் :—ஓ முனிவரே ! மஹா பாபங்களைப் போக்கவல்ல இருபத்து நான்கு வர்ணங்களுக்கு எந்தச் சக்திகள் எந்த நிறங்கள் எந்தத் தத்துவங்கள் எந்த முத்திரைகள் சொல்லப் பட்டிருக்கின்றனவோ அவைகளை முறையாகச் சொல்லுகிறேன் கேளும்.

### சக்திகள்

வாமதேவீ பிரியை ஸத்தியா விஸ்வா பத்ரவிலாசினி பிரபாவதி ஜயா சாந்தா காந்தா துர்க்கா ஸரஸ்வதீ வித்ருமா விசாலேசா வியா பினி விமலா தமோபஹாரிணி சூக்ஷ்மா விஸ்வயோநி ஜயாவசா பத்மாலயா பராசோபா பத்ரா திரிபதா இச்சக்திகளேயாம்.

### நிறங்கள்

சம்பகம் காசாம்பூ பவளம் ஸ்படிகம் தாமரை இளஞ்சூரி

யன் * சங்கு குருக்கத்தி சந்திரன் இளந்தாமரையிலை பத்மராகம் இந்திரநீலம் முத்து குங்குமம் மை ரக்தம் வைடூரியம் தேன் மஞ்சள் குருக்கத்திப்பால் சூரியகாந்தி கிளிவால் சதபத்திரம் (தாமரை) தாழை மல்லிகை அலரி இம்மலர்களுக்குரிய நிறங்களே நிறங்களென்று சொல்லப்படும்.

### தத்துவங்கள்

பிரிதிவி முதலிய பஞ்சபூதம், கந்தம் முதலிய பஞ்சதன் மாத்திரை, உபஸ்தாதி பஞ்சகன்மேந்திரியங்கள், ஆக்ராணாதி பஞ்சஞானேந்திரியங்கள், பிராணன் அபானன் வியானன் சமானன் ஆகிய நான்கு வாயுக்கள்; இவ்விருபத்து நான்குமே தத்துவங்களென்று சொல்லப்படும்.

### முத்திரைகள்

ஸுமுகம் (எதிர்கூப்புதல்) சம்புடம் விததம் (விரித்தல்) விஸ்ரிதம் துவிமுகம் த்ரிமுகம் சதுர்முகம் பஞ்சமுகம் ஷண்முகம் அதோமுகம் வியாபகாஞ்சலி சகடம் யமபாசம் கிரதிதம் (சேர்த்தல்) சமுகோன்முகம் விலம்பம் முஷ்டி மச்சம் கூர்மம் வராஹம் சிம்மாக்கிராந்தம் மகாகிராந்தம் முத்கரம் (உலக்கை) பல்லவம் (தளிர்) திரிசூலம் இவ் விருபத்து நான்கும் தனி முத்திரைகளென வும் யோனி சுரபி அக்ஷமாலை லிங்கம் பத்மம் மஹாமுத்திரை இவ்வாறும் நன் நான்குக்கு ஒவ்வொரு மகாமுத்திரை யெனவுஞ் சொல்லப்படும். (1–18)

ஓம் அணிமாதி குணாதாராயை நம:

## 3. காயத்திரீ கவசம்

நாரதர் கூறுகின்றார் :—ஓ சுவாமி! சர்வஜகந்நாதரே ! அறு பத்து நான்கு கலைகளும் வல்லவரே ! யோகிகளுக்குள் சிரேஷ்ட மானவரே ! எனக்குச் சில சந்தேகங்க ளிருக்கின்றன. அவை என்ன வென்று தேவரீர் கேட்டருளவேண்டும். எந்தப் புண்ணியத் தினால் பாபத்தினின்றும் விடுபட்டு நான் பிரம்ம சொரூபமாக ஆவேனோ என் தேகம் தேவதாரூபமாயும் மந்திரரூபமாயும் ஆகுமோ, அந்தக் கர்மாவையும் விதிபூர்வமான நியாசம் ரிஷி சந்தஸ் தெய்வம் விதியோடுகூடிய தியானம் இவைகளை அறியா திருக்கின்றேனாகலின் அவற்றைக் கேட்க இச்சிக்கின்றே னென்றனர்.

நாராயணர் கூறுகின்றார் :—† அதிபரம ரகசியமான காயத்திரீ கவசமென ஒன்றிருக்கின்றது. அதனை ஒருவன் படனஞ் செய்

* சங்கு குருக்கத்தி சந்திரன் இம்மூன்றையும் ஓர் நிறமாகக் கொள்க.

†அஸ்தீயேகம் பரமம்குஹ்யம் காயத்ரீ கவசந்ததா |
படநாத் தாரணந் மர்த்ய: ஸர்வபாபை: ப்ரமுச்யதே ||
ஸர்வாந் காமா நவாப்நோதி தேவீரூபஶ்ச ஜாயதே |
காயத்ரீ கவசஸ் யாஸ்ய பிரஹ்மவிஷ்ணு மஹேஶ்வரா: ||

தாலும் மனதில் சிந்தித்தாலும் சர்வ பாபங்களினின்றும் விடு பட்டுச் சகல காமங்களையும் அடைந்து தேவீசொரூபமாகின்றான். காயத்திரி கவசத்திற்கு பிரமவிஷ்ணு மஹேஸ்வரர்களே ரிஷிகள், நான்கு வேதங்களே சந்தஸுகள், பிரம சொரூபமே தேவதை,

---

ரிஷயோ ருக்யஜுஸ்ஸாமா தர்வச்சந்தாம்ஸி நாரத ।
பிரஹ்மரூபா தேவதோக்தா காயத்ரீ பரமாகலா ॥
தத்பீஜ பர்க யித்யேஷா சக்திருக்தா மநீஷிபி: ।
கீலகஞ் சதிய:ப்ரோக்தம் மோக்ஷார்த்தே விநியோஜனம் ॥
சதுர்ப்பிர் ஹ்ருதயம் ப்ரோக்தம் த்ரிபிர் வர்ணைஶ் ஶிரஸ்ம்ருதம் ।
சதுர்ப்பிஸ்யாச் சிகாபஶ்சாத் த்ரிபிஸ்து கவசம் ஸ்மிருதம் ॥
சதுர்பிர் நேத்ரமுத்திஷ்டம் சதுர்ப்பிஸ்யாத் ததஸ்ரகம் ॥
அதத்யானம் பிரவக்ஷ்யாமி ஸாதகா பீஷ்டதாயகம் ॥
முக்தா வித்ரும ஹேமநீல தவளச் சாயைர் முகைஸ்திரீ க்ஷணை: ।
யுக்தாமிந்து நிபத்த ரத்ன முகுடாம் தத்வார்த்த வர்ணாத்மிகாம் ॥
காயத்ரீம் வரதா பயாங்குஶ கஶாம் ஸுப்ரங் கபாலங்குணம் ।
சங்கம் சக்ரமதாரவிந்த யுகளம் ஹஸ்தைர் வஹந்தீம் பஜே ॥
காயத்ரீ பூர்வத: பாது ஸாவித்ரீ பாதுதக்ஷிணே ।
ப்ரஹ்ம சந்தியாதுமே பஶ்சா துத்தராயாம் ஸரஸ்வதீ ॥
பார்வதீ மேதிஶம்ரக்ஷத் பாவகீ ஜலஶாயிநீ ।
யாது தாநீ திஶம்ரக்ஷேத் யாதுதாந பயங்கரீ ॥
பாவமாநீ திஶம்ரக்ஷேத் பவமான விலாஸிநீ ।
திஶரௌத்ரீஞ் சமேபாது ருத்ராணீ ருத்ர ரூபிணீ ॥
ஊர்த்வம் பிரஹ்மாணி மேரக்ஷே ததஸ்தாத் வைஷ்ணவீததா ।
ஏவந் தஶதிஶோ ரக்ஷேத் ஶர்வாங்கம் புவனேஶ்வரீ ॥
தத்பதம் பாதுமே பாதௌ ஜங்கேமே ஸவிது:பதம் ।
வரேண்யம் கடிதேஶேது நாபிம் பர்கஸ் ததைவச ॥
தேவஸ்ய மேதத்திருதயம் தீமஹீதிச கல்லயோ: ।
திய:பதஞ்ச மேநேத்ரே ய:பதம்மே லலாடகம் ॥
ந:பாது மேபதம்மூர்த்நீ ஶிகாயாம்மே ப்ரசோதயாத் ।
தத்பதம் பாதுமூர்த்தாநம் ஸகார: பாதுபாலகம் ॥
சக்ஷுஷீது விகாரார்ணஸ் துகாரஸ்து கபோலயோ: ।
நாஸாபுடம் வகாரார்ணே ரேகாரஸ்து முகேததா ॥
ணிகாரவூர்த்வ மோஷ்டந்து யகாரஸ் த்வதரோஷ்டகம் ।
ஆஸ்யமத்யே பகாரார்ணோர் கோகாரஶ் சுபுகேததா ॥
தேகார: கண்டதேஶேது வகார ஸ்கந்ததேஶகம் ।
ஸ்யகாரோ தக்ஷிணம்ஹஸ்தம் தீகாரோ வாமஹஸ்தகம் ॥
மகாரோ ஹ்ருதயம் ரக்ஷேத் திகார உதரேததா ।
திகாரோ நாபிதேஶேது யோகாரஸ்து கடிந்ததா ॥
குஹ்யம்ரக்ஷது யோகார ஊருத் வவ்ந: பதாக்ஷரம் ।
ப்ரகாரோ ஜாநுநீரக்ஷேச் சோகாரோ ஜங்கதேஶகம் ॥
தகாரம் குல்பதேஶேது யகார: பதயுக்மகம் ।
தகார வ்யஞ்ஜனஞ்சைவ ஸர்வாங்கேமே ஸதாடவது ॥
இதந்து கவசந்திவ்யம் பாதாஶத விநாஶநம் ।
சதுஷஷ்டி கலாவித்யா தாயகம் மோக்ஷகாரகம் ॥
முச்யதே ஸர்வபாபேப்ய: பரம் ப்ரஹ்மாதி கச்சதி ।
படநாச் ஶ்ரவணாத் வாபி கோஸஹஸ்ர பலம்லபேத் ॥

பரமாகலா காயத்திரி பீஜம், பர்சகன் சக்தி, திய: கீலகம், மோக்ஷார்த்தமே விநியோஜனம். இந்த நியாசங்களைச் செய்த பின்னர் நான்கு வர்ணங்கள் இருதயத்தினிடத்தும், மூன்று வர்ணங்கள் சிரத்தினிடத்தும், நான்கு வர்ணங்கள் சிகையினிடத்தும், மூன்று வர்ணங்கள் கவச மந்திரமாகத் தோள்களிடத்தும், நான்கு வர்ணங்கள் நேத்திரங்களிடத்தும், நான்கு வர்ணங்கள் அஸ்திர மந்திரமாகத் திக்பந்தனத்துக்கும் கொண்டு நியாசஞ் செய்யும்படிச் சொல்லப்பட்டிருக்கின்றது. இனிச் சாதகனுக்கு அபீஷ்டத்தைக் கொடுக்கும் தியானஞ் சொல்லுகிறேன். முத்து பவளம் சுவர்ணம் நீலம் வெண்மை இந்த நிறங்களோடுகூடிய முகமுடையவளாயும் மூன்று நேத்திர முடையவளாயும் சந்திரனோடு கூடிய ரத்னமகுட முடையவளாயும் தத்வார்த்தங்களுள்ள வர்ண சொரூபிணியாயும் வரதம் அபயம் பாசம் அங்குசம் வெண்ணிறமுடைய கபாலம் சங்கம் சக்கரம் இரண்டு தாமரை இவைகளைக் கையிற் ருங்கினவளாயுமுள்ள காயத்திரி தேவியைப் பூஜிக்கின்றேன் என்பதாம்.

## கவசம்

காயத்திரி கிழக்கு திக்கில் காக்க, சாவித்திரி தெற்குதிக்கில் காக்க, ப்ரஹ்மசந்தி மேற்கு திக்கில் காக்க, ஸரஸ்வதி உத்தர திக்கில் காக்க, பாபஹாரிணியாயும் மேதசம்ரக்ஷணியாயும் ஜலசாயினியாயு முள்ள பார்வதி அக்னி திக்கில் காக்க, ராக்ஷசர்களைப் பயப் படுத்தும் யாதுதானி நைருதி திக்கில் காக்க, பவமான விலாசினி வாயு திக்கில் காக்க, ருத்ராணி ஈசான திக்கில் காக்க, பிரம்மாணி எனது ஊர்த்துவ பாகத்தைக் காக்க, வைஷ்ணவி அதோ பாகத்தைக் காக்க, இந்த ப்ரகாரம் இந்தச் சக்திகள் பத்துத் திக்குகளிலுங் காக்க; புவனேஸ்வரி சர்வாங்கத்தையுங் காக்க, தத்பதம் எனது பாதங்களைக் காக்க, சவிதுப்பதம் கணுக்கால்களைக் காக்க, வரேண்யம் இடையைக் காக்க, பர்கம் நாபியைக் காக்க, தேவஸ்யம் எனது இருதயத்தைக் காக்க, தீமஹி முகவாய்க்கட்டையைக் காக்க, தியப்பதம் நேத்ரங்களைக் காக்க, ய:பதம் நெற்றியைக் காக்க, நப்பதம் சிரசைக் காக்க, பிரசோதயாத் சிகையைக் காக்க, தத்பதம் சிரசைக் காக்க, ஸகாரம் பாலத்தைக் காக்க, வி என்னும் அக்ஷரம் நேத்திரங்களைக் காக்க, துகாரம் கபோலங்களைக் காக்க, வகாரம் நாசியைக் காக்க, ரேகாரம் முகத்தைக் காக்க, ணிகாரம் மேலுதட்டைக் காக்க, யகாரம் கீழுதட்டைக் காக்க, ப(भ)காரம் வாயின் மத்தியைக் காக்க, கோ(र्गो)காரம்) முகவாய்க் கட்டையைக் காக்க, தே(दे)காரம் கண்டத்தை காக்க, வகாரம் தோள்களைக் காக்க, ஸ்யகாரம் வலது கையைக் காக்க, தீகாரம் இடக்கையைக் காக்க, மகாரம் இருதயத்தைக் காக்க, ஹீகாரம் வயிற்றைக் காக்க, தி(धि)காரம் நாபியைக் காக்க, யோகாரம் இடுப்பைக் காக்க, யோகாரம் குஹ்யத்தையும் ந:பதாக்ஷரம் தொடைகளையுங் காக்க, ப்ரகாரம் முழங்கால்களைக் காக்க, சோகாரம் கணுக்கால்

களைக் காக்க, த(த்)காரம் புறங்கால்களைக் காக்க, யகாரம் இரண்டு பாதங்களையுங் காக்க, தகாரம் சர்வாங்கங்களைக் காக்க.

இத்திவ்யமான கவசம் நூறு விதமான துன்பங்களைப் போக்க டிப்பதாயும் அறுபத்து நான்கு கலைஞானங்களைக் கொடுப்பதாயும் மோக்ஷகரமாயு மிருக்கிறது. இதனைப் படித்தாலுங் கேட்டாலும் ஆயிரம் பசுக்களைத் தானஞ் செய்த பலனை யடைந்து சர்வ பாபங் களினின்றும் விடுபட்டுப் பிரம்மசொரூபத்தை யடைகிறார்கள். (1–25)

ஓம் அர்க்கமண்டல ஸம்ஸ்திதாயை நம:

## 4. காயத்திரீ ஹிருதயம்

நாரதர் கூறுகின்றார் :—பகவானே! தேவதேவேசரே! ஜீவர் களால் தோத்திரம் செய்யப்பட்டவரே! ஜகத்பிரபுவாகிய நாரா யணரே! காயத்திரீ மந்திரத்திற்குத் திவ்யசொரூபமாக விருக்கின்ற கவசம் தேவரீரால் கேட்கப்பெற்றேன். எதை ஜபிப்பதனாலும் மனதிற்றரிப்பதனாலும் சகலவிதமான புண்ணியங்களும் வருகின்ற னவோ அந்த சிரேஷ்டமாகிய காயத்திரீ ஹ்ருதயத்தை இப்போது நான்கேட்க இச்சிக்கிறேனென்றனர். நாராயணர் கூறுகின்றார் : ஓ நாரதரே! நீ விரும்பியபடி அதர்வண வேதத்தில் நன்றாகச் சொல்லப்பட்டிருக்கிற ரகசியத்திலும் அதி ரகசியமாகிய தேவீ ஹ்ருதயத்தை நானிப்போது சொல்லுகிறேன். வேதமாதாவாயும் விராட் ரூபிணியாயும் மகாதேவியாயு மிருக்கின்ற காயத்திரியைத் தியானஞ்செய்து அந்தத் தேவியினுடைய அங்கங்களிற் சொல்லப் படுந் தேவதைகளைத் தியானிக்கவேண்டும். எவ்வாறெனின் சாதகன் பிண்டபிரமாண்டங்கள் அத்தேவியினிடத்தில் ஐக்கியமா யிருக்கின்றபடியால் தன் சரீரத்தைத் தேவியினது நிஜசொரூப மாகத் தியானிக்கவேண்டியது. வேதவித்துக்கள் தன்னைத் தேவீ சொரூபமாக நினைக்காதவன் தேவீ தியானத்துக்கு யோக்யனல்ல னென்று சொல்லுகிறார்கள். ஆகையால் தன் தேகத்தில் இந்தத் தேவதைகளைப் பேதமின்றித் தியானிக்கவேண்டும். தியானித்தபின் தன்மயனாதலைப் பிறகு சொல்லுகிறேன். இந்தக் காயத்திரீ ஹ்ருத யத்துக்கு நாராயணனாகிய நானே ரிஷி, காயத்திரியே சந்தஸ், தேவதை பரமேஸ்வரி, அங்கன்னியாஸம் முற்கூறியபடி மானிட சஞ்சாரமில்லாத விடத்தில் ஆசனத்தில் ஏகாக்கிரமனத்துடன் தியானிக்கவேண்டியது. அதன் பிறகு அர்த்தந்நியாசஞ் செய்ய வேண்டும். எப்படியெனில், சிரசில் சுவர்க்கதேவதை, பல்வரிசை யில் அச்வினி தேவதைகள், அதரத்தில் உபயசந்தி, முகத்தில் அக்னி, நாக்கில் ஸரஸ்வதி, கண்டத்தில் பிரகஸ்பதி, ஸ்தனத்தில் அஷ்டவசுக்கள், புஜத்தில் சப்தமருத்துக்கள், ஹ்ருதயத்தில் மேகம், வயிற்றில் ஆகாயம், நாபியில் அந்தரிக்ஷம், இடையில் இந்திரன் அக்னி, ப்ருஷ்டங்களில் விஞ்ஞானதனம் பிரஜாபதி, தொடைகளில் கைலாயம் இமயம், முழங்காலில் விச்வேதேவர்கள், கணுக்கால்களில் கௌசிகர், ஆண்குறியில் அயனம், பாதங்களில்

பிரிதிவி, விரல்களில் வனதேவதைகள், ரோமங்களில் ரிஷிகள், நகங்களில் முகூர்த்தங்கள், அஸ்திகளில் கிரகங்கள், ரக்த மாம்சங் களில் ருதுக்கள் சம்வத்ஸரங்கள் நிமிஷங்கள் ராப்பகல் சந்திர சூரியர்கள், இவ்வண்ணமாக அர்த்த நியாசஞ்செய்து சிரேஷ்ட மாயும் திவ்யமாயும் ஆயிரங் கண்ணுள்ளவளாயும் இருக்கின்ற அந்தக் காயத்திரி தேவியைச் சரணுக அடைகின்றேன், என்று சொல்லி ஓம் தத்ஸவிது என்னும் மந்திரங்களைச் சொல்லித் தியானித்தல் வேண்டும்.

இந்தக் காயத்திரி இருதயத்தை இந்தமுறைப்படி எவன் காலையில் தியானிக்கின்றுனே அவன் ராத்திரியிற்செய்த பாவத்தினின் றும் விடுபடுகின்றுன். எவன் மாலையில் தியானிக்கின்றுனே அவன் பகற்பொழுதில் செய்த பாவத்தினின்றும் விடுபடுகின்றுன். எவன் இரண்டுபொழுதினும் தியானிக்கின்றுனே அவன் பாவமில்லாத வனுகவே ஆகின்றுன். இதுவேயுமன்றி அவன் சர்வ தீர்த்தங் களிலும் ஸ்நானஞ்செய்தவனுகின்றுன். சகல தேவதைகளாலுந் தெரியப்பட்டவனுகின்றுன். சொல்லத்தகாத சொல்லைச் சொல்வ தனுலும் உண்ணக்கூடாத பக்ஷ்ய போஜ்யசோஷ்யம் முதலிய வற்றை உண்பதனுலும் அசாத்ய சாதனங்களைச் செய்வதனுலும் நூறுயிரம் துர்த்தானங்களை வாங்குவதனுலும் சர்வதானங்களை வாங்குவதனுலும் சமானமாக விருந்து உண்ணக் கூடாதவர் களோடிருந்து உண்பதனுலும் பிரமசரிய நிலையினின்றும் தவறு தலாலும் உண்டாகும் பாவங்களினின்றும் விடுபடுகின்றுன். ஆயிரம் யாகஞ்செய்தால் எந்தப்பலனே அந்தப் பலனையும் அறு பதினுயிரம் காயத்திரி ஜபஞ் செய்தால் எந்தப்பலனே அந்தப் பலனையும் அடைகிறுன். இதனை எட்டுப் பிராம்மணர்கள் கிரஹிக் கும்படி உபதேசித்தால் சித்தியுண்டாகும். ஆகையால் பிராமணன் பிராதக்காலத்தில் சுசியுடையவனுய் இதனைத் தியானிப்பானுயின் சர்வ பாவங்களினின்றும் விடுபட்டவனுய் பிரமலோகத்தில் பூஜிக்கப் படுகிறுன் என்று கூறினுர். (1–8)

ஓம் அஜராபிஜாயை நம:

## 5. காயத்திரி தோத்திரம்

நாரதர் நாராயணரைப்பார்த்து, ஓ பக்தானுக்கிரகம் புரிகின் றவரே! சகலமுமுணர்ந்தவரே! தேவரீர் அடியேனுக்குப் பாபத் தைப்போக்குங் காயத்திரி ஹ்ருதயம் சொல்லியருளினீ ராகலான் காயத்திரீ தோத்திரத்தையும் எனக்குச் சொல்லவேண்டுமென்று கேட்க, நாராயணர் கூறுகின்றுர்: ஆதிசக்தியாயும் ஜகன்மாதாவா யும் பக்தாநுக்கிரக காரணியாயும் சர்வ வியாபிநியாயும் அந்த மில்லாதவளாயும் திரிசந்தி சொரூபிணியாயு மிருக்கின்ற ஓ காயத்ரீ! உனக்கு நமஸ்காரம். ஓ காயத்ரீ! நீதான் சந்தி, நீதான் காயத்திரி, நீதான் சாவித்திரி, நீதான் ஸரஸ்வதி, நீதான் பிராம்ஹி, நீதான் வைஷ்ணவி, நீதான் ரௌத்ரி, நீதான் ரக்தை, நீதான் ஶ்வேதா,

நீதான் கறுப்பு. ஓ பகவதீ! நீயே பிராதக்காலத்தில் பாலை சொரூபிணியாயும் மத்யானகாலத்தில் யௌவன சொரூபிணியாயும் சாயங்காலத்தில் விருத்தசொரூபிணியாயு மிருக்கின்றுயென்று முனிவர்கள் எக்காலத்தும் சிந்திக்கின்றனர். ஹம்ஸவாகனுரூடையாயும் கருடாரூடையாயும் வ்ருஷபா ரூடையாயும் பூமியில் ருக்வேதத்தைத் தியானஞ் செய்கின்றவளாயும் தபஸ்விகளால் எந்தத்தேவி காணப்படுகின்ருளோ அந்தரிக்ஷத்தில் யஜுர் வேதத்தைப் படிக்கின்றவளாக எவள் பிரகாசிக்கின்ருளோ எங்கும் சாமத்தைக் கானஞ் செய்கின்றவளாக எவளிருக்கின்ருளோ அவள் பூமியில் சஞ்சாரஞ் செய்கின்றவளா யிருக்கின்ருளென்றும், நீயே ருத்ரலோகத்தை யடைந்திருக்கிருய், நீயே விஷ்ணுலோகத்தில் நிவாசினியா யிருக்கின்ருய், பிரமலோகத்தில் மனுஷ்யாளுக்கு அனுக்கிரக காரணியா யிருக்கின்ருய்; சப்தரிஷிகளுக்குப் பிரீதியை யுண்டாக்குகின்ருய்; மாயா சொரூபிணியா யிருக்கின்ருய்; அநேகவரங்களைக் கொடுக்கின்றவளா யிருக்கின்ருய்; பார்வதி பரமேஸ்வரர்களது கரங்களின் வியர்வையினின்றும் நேத்திரங்களின் கண்ணீரினின்றும் உண்டானவளாயிருக்கின்ருய். யாவருக்கும் ஆனந்தத்தை யுண்டுபண்ணுகின்றவளாயிருக்கின்ருய்; தசதுர்க்கா சொரூபிணியாயிருக்கின்ருயென்றும் கூறப்படுவதுமன்று; அடையத்தக்கவளாயும் வரத்தைக் கொடுக்கின்றவளாயும் சிரேஷ்டையாயும் உத்தமஸ்திரீயாயும் குருத்வமுடையவளாயும் வராஹ சொரூபிணியாயும் சப்தவாராஹியாயும் நீலகங்கையாயும் சக்தியாயும் சர்வபோக மோக்ஷங்களைக் கொடுக்கின்றவளாயும் மத்யலோகத்தில் பாகீரதியாயும் பாதாளத்தில் போகவதியாயும் திரிலோகவாஹினியாயும் தேவீ ஸ்தானத்திரய நிவாசினியாயும் நீயே பூதலோகத்தில் (தாத்ரீ) சகலத்தையும் தாங்குகின்றவளாயும் சோகதாரணியாயும் புவர்லோகத்தில் வாயுசக்தியாயும் சுவர்லோகத்தில் தேஜஸுக்கு நிதியாயும் மகாலோகத்தில் மஹா சித்தியாயும் ஜனர்லோகத்தில் ஜனனியாயும் தபோலோகத்தில் தபஸ்வினியாயும்சத்தியலோகத்தில் சத்யவாக்காயும் விஷ்ணுலோகத்தில் கமலையாயும் பிரமலோகத்தில் காயத்திரியாயும் ருத்திரலோகத்தில் பரமசிவனது அர்த்தாசன வாசினியாகிய கௌரியாயும், எனக்கும் மகத்துக்கும் பிரகிருதியாயும் சமானமான அவஸ்தா சொரூபிணியாயும் ஶபலப் பிரம சொரூபிணியாயும் பராபரையாயும் இச்சாசக்தி கிரியாசக்தி ஞானசக்தி என்னும் மூன்று சக்திகளாயும் இருக்கின்ருயென்றும் கங்கை யமுனை விபாசை ஸரஸ்வதி சரயு தேவிகா சிந்து நர்மதா ஐராவதி கோதாவரி சதத்ரு காவேரி தேவலோககா கௌசிகி சந்திரபாகை விதஸ்தை ஸரஸ்வதி கண்டகீ தாபநீ தோயா வேத்ரவதி என்கிற தீர்த்த சொரூபிணியாயும் சரீரத்திலுள்ள இடகலை பிங்கலை ஸுஷும்நை காந்தாரி அஸ்திஜிக்வை பூஷை அலம்பூஷை குஹூ ஹெளு சங்கினி பிராணவாஹினி என்று சொல்லப்பட்ட நாடிகளாயும் இருக்கின்ருயென்றும், இருதய கமலத்தில் பிராண சக்தியாயும் கண்டத்தில் ஸ்வப்ந நாயகியாயும் தாலுவில்

ஸதாதாரையாயும் பிந்துஸ்தானத்தில் பிந்துமாலினியாயும் மூலத்தில் குண்டலினி சக்தியாயும் கேசமூலத்தில் வியாபிநியாயும் சிகை மத்தியில் வியாபிநியாயும் சிகை நுனியில் மனோன்மணியாயும் இருக்கின்ருயென்றும் சொல்லப்பட்டிருக்கின்றது. இன்னும் விரிவாய்ச் சொல்வதினால் பிரயோஜனமென்னே? மூன்றுலகத்திலும் எது எது விருக்கின்றதோ, அவையெல்லாம் நீயேதான். ஓ மஹா தேவீ! ஓ ஈஶ்வரியே! ஓ சந்திசொரூபிணி! உன்னை நமஸ்கரிக்கிறேனென்று எவன் சந்தியாகாலத்தில் பக்தி சிரத்தையோடு பாராயணஞ் செய்கின்ருனே அவனுக்கு அளவில்லாத புண்ணியத்தைக் கொடுக்கும்; மகாபாபத்தைப் போக்கும்; மகாசித்தியைக் கொடுக்கும். புத்திரஹீனனுக்குப் புத்திரனையும் தனஹீனனுக்குத் தனத்தையும் சகல தீர்த்த ஸ்நான பலத்தையும் தவம் யக்ஞம் யாகம் முதலிய பலன்களையும் வேண்டினவர்க்கு அவ்வப்பலன்களையுங் கொடுக்கும். போகமோக்ஷங்களை வேண்டினவர்க்கு இம்மையில் போகங்களையும் அந்தியத்தில் மோக்ஷத்தையும் அடையும்படிச் செய்யும். இத்துதியை எந்தெந்த ஸ்நானகாலங்களில் எவன் படித்து எந்த ஜலத்தில் ஸ்நானஞ் செய்தபோதிலும் சந்தியா காலத்தில் ஸ்நானஞ்செய்த பலனையடைவன். இதிற் சந்தேகங்கிடையாது. ஓ நாரதரே! இது அமிர்த வாக்கியமாகும். இது சத்தியம், சத்தியம். (1–29)

ஓம் அபராயை நம:

## 6. காயத்திரீ ஸஹஸ்ரநாமம்

நாரதர் நாராயணரைப் பார்த்து, ஓ பகவானே! சகலமுமுணர்ந்தவரே! சகல சாஸ்திரங்களிலும் வல்லவரே! நாராயணரே! தேவரீரால் சுருதி ஸ்மிருதி புராணங்களின் ரகசியங்களைக் கேட்கப் பெற்றேன். ஓ தேவ! எந்த வித்யா பிரவாகத்தால் பாவநாசமுண்டாகுமோ, எதனுல் பிரம்மவிக்ஞான முண்டாகுமோ, எதனுல் மோக்ஷசாதன முண்டாகுமோ, எதனுல் பிராமணர்களுக்கு நல்ல கதியுண்டாகுமோ, எதனுல் மிருத்யு நாசமுண்டாகுமோ, எதனுல் இகலோக பரலோக பலனுண்டாகுமோ அதை ஆதிமுதலாகக் குறைவில்லாமற் சொல்லவேண்டும் ஓ பத்மலோசனரே! என்று பிரார்த்தித்தனர். ஸ்ரீ நாராயணர் கூறுகின்ருர்: பிராக்ஞராயும் தோஷமில்லாதவராயு மிருக்கின்ற ஓ மகா சாதுவாக்கிய நாரதரே! நீர் கேட்டதாகிய ஒவ்வொன்றும் நல்ல கேள்வியாகலின் பாவநாசனமாயும் திவ்யமாயும் சுபமாயுமிருக்கும் காயத்திரி நாமங்கள் ஆயிரத்தெட்டுள்ளன; அவை பகவானுல் சிருஷ்டியின் ஆரம்பத்தில் சொல்லப்பட்டன. அவைதான் அந்தணர்கட்கு அக்கணமே பாவநாசத்தைச் செய்வதும் மோக்ஷசாதனத்தைக் கூட்டுவதும் பிரம்மஞானத்தை விளைவிப்பதும் மிருத்யு பயத்தைப் போக்கி நல்ல கதியை யுண்டாக்குவதுமாம். அவற்றைப் பிரயத்தனத்துடன் உமக்குச் சொல்லுகிறேன், கேளும். அந்த ஸஹஸ்ர

நாமத்துக்கு ரிஷி பிரம்மா, அனுஷ்டுபு சந்தஸ், காயத்திரிதேவதை ; பீஜம் ஹல் ஸ்வரம் சக்தி அங்கன்னியாச கரன்னியாசம் மாத்ருகாக்ஷரங்கள் என்னும் இவைகள் உள்ளன. இனிச் சாதகனுக்கு இதங்கொடுக்கும் பொருட்டு தியானஞ்சொல்லுகிறேன் : சிவப்பு வெளுப்பு கறுப்பு பொன் தவளம் ஆகிய நிறத்தோடும் திரிநேத்திரத்தோடும் புதிய சிவப்புப் புஷ்பமாலையோடும் நவரத்னமணிகளின் பிரகாசத்தோடும் விளங்கும் குமாரியாயும் காயத்திரியாயும் பத்மாசனேயாயும் கரதலத்தில் பிரகாசிக்கும் தாமரைபோன்ற பாத்ரமுடையவளாயும் பத்மாக்ஷியாயும் வரத்தைக் கொடுப்பவளாயும் அன்னவாக முடையவளாயு மிருக்கின்ற தேவியைத் தியானஞ் செய்கிறேன் என்று தியானித்தல் வேண்டும்.

அசிந்திய லக்ஷுணயைநம:
அவ்யக்தாயைநம:
அர்த்தமாத்ருமஹேஶ்வர்யைநம:
அமிர்தார்ணவமத்யஸ்தாயைநம:
அஜிதாயைநம:
அபராஜிதாயைநம:
அணிமாதிகுணுதாராயைநம:
அர்க்கமண்டலஸம்ஸ்திதாயைநம:
அஜராSஜாயைநம:
அபராயைநம: (10)
தர்மாயைநம:
அக்ஷஸூத்ர தராயைநம:
தராயைநம:
அகாராதிக்ஷகாராந்தாயைநம:
அரிஷட்வர்க பேதின்யைநம:
அஞ்ஜநாதி ப்ரதீகாஶாயைநம:
அஞ்ஜநாத்ரிநிவாஸிந்யைநம:
அதித்யைநம:
அஜபாயைநம:
வித்யாயைநம: (20)
அரவிந்த நிபேக்ஷுணயைநம:
அந்தர் பஹிர் ஸ்திதாயைநம:
அவித்யா த்வம்ஸிந்யைநம:
அந்தராத்மிகாயைநம:
அஜாயைநம:
அஜமுகா வாஸாயைநம:
அரவிந்த நிபாநநாயைநம:
அர்த மாத்ராயைநம:
அர்த்த தானக்ஞாயைநம:
அரிமண்டல மர்திந்யைநம: (30)
அஸுரக்ந்யைநம:
அமாவாஸ்யைநம:
அலக்ஷ் மீக்ந்யைநம:
அந்த்யஜார்ச்சிதாயைநம:
ஆதிலக்ஷ்ம்யைநம:
ஆதிஶக்த்யைநம:
ஆக்ருத்யைநம:
ஆயதா நநாயைநம:
ஆதித்ய பதவீசாராயைநம:
ஆதித்ய பரிஸேவிதாயைநம: (40)
ஆசார்யாயைநம:
ஆவர்த்தநாயைநம:
ஆசாராயைநம:
ஆதிமூர்த்திநிவாஸிந்யைநம:
ஆக்நேயைநவ:
ஆமர்யைநம:
ஆத்யாயைநம:
ஆராத்யாயைநம:
ஆஸனஸ்திதாயைநம:
ஆதார நிலயாயைநம: (50)
ஆதாராயைநம:
ஆகாஶாந்த நிவாஸிந்யைநம:
ஆத்யாக்ஷர ஸமாயுக்தாயைநம:
ஆந்தராகாஶரூபிண்யைநம:
ஆதித்யமண்டல கதாயைநம:
ஆந்தரத்வாந்த நாஶிந்யைநம:
இந்திராயைநம:
இஷ்டதாயைநம:
இஷ்டாயைநம:
இந்தீவரநிபேக்ஷுணயைநம: (60)
இராவத்யைநம:
இந்த்ரபதாயைநம:
இந்த்ராண்யைநம:
இந்துரூபிண்யைநம:
இக்ஷுகோதண்டஸம்யுக்தாயைநம:
இஷுஸந்தானகாரிண்யைநம:
இந்த்ரநீல ஸமாகாராயைநம:
இடாபிங்கல ரூபிண்யைநம:
இந்த்ராக்ஷ்யைநம:
ஈஶ்வரீதேவ்யைநம: (70)

ஈஹாத்ரய விவர்ஜிதாயைநம:
உமாயைநம:
உஷாயைநம:
உடுநிபாயைநம:
உர்வாருக பலானநுயைநம:
உடுப்ரபாயைநம:
உடுமத்யைநம:
உடுபாயைநம:
உடுமத்ய காயைநம:
ஊர்த்வாயைநம: (80)
ஊர்த்வகேஸ்யைநம:
ஊர்த்வாதோகதிபேதிந்யைநம:
ஊர்த்வபாஹுப்ரியாயைநம:
ஊர்மிமாலாவாக்ரந்ததா யிந்யை
ரிதாயைநம: [நம:
ரிஷயேநம:
ரிதுமத்யைநம:
ரிஷிதேவ நமஸ்கிருதாயைநம:
ரிக்வேதாயைநம:
ரிணஹர்த்ரியைநம: (90)
ரிஷிமண்டலசாரிண்யைநம:
ரித்திதாயைநம:
ரிஜுமார்கஸ்தாயைநம:
ரிஜுதர்மாயைநம:
ரிதுப்ரதாயைநம:
ரிக்வேதநிலயாயைநம:
ரிஜ்வ்யைநம:
லுப்ததர்மப்ரவர்த்திந்யைநம:
லூதாரிவரஸம்பூதாயைநம:
லூதாதிவிஷஹாரிண்யைநம: (100)
ஏகாக்ஷராயைநம:
ஏகமாத்ராயைநம:
ஏகாயைநம:
ஏகைகநிஷ்டிதாயைநம:
ஐந்த்ர்யைநம:
ஐராவதா ரூடாயைநம:
ஐஹிகாமூஷ்மிக ப்ரதாயைநம:
ஓங்காராயைநம:
ஓஷத்யைநம:
ஓதாயைநம: (110)
ஓதப்ரோத நிவாஸிந்யைநம:
ஔர்வாயைநம:
ஔஷத ஸம்பந்நாயைநம:
ஔபாஸந பலப்ரதாயைநம:
அண்டமத்யஸ்திதாதேவ்யைநம:
அ:காரமநுரூபிண்யைநம:
காத்யாயிந்யைநம:
காலராத்ர்யைநம:
காமாக்ஷ்யைநம:
காமஸுந்தர்யைநம: (120)
கமலாயைநம:
காமிந்யைநம:
காந்தாயைநம:
காமதாயைநம:
காலகண்டிந்யைநம:
கரிகும்ப ஸ்தனபராயைநம:
கரவீரஸுவாஸிந்யைநம:
கல்யாண்யைநம:
குண்டலவத்யைநம:
குருக்ஷேத்திர நிவாஸிந்யைநம:
குருவிந்த தலாகாராயைநம:
குண்டல்யைநம:
குமுதா லயாயைநம:
காலஜிஹ்வாயைநம:
கராலாஸ்யாயைநம:
காளிகாயைநம:
காலரூபிண்யைநம:
கமநீய குணுயைநம:
காந்த்யைநம:
கலாதாராயைநம:
குமுத்வத்யைநம:
கௌசிக்யைநம:
கமலா காராயைநம:
காமசார பிரபஞ்ஜிந்யைநம:
கௌமார்யைநம:
கருணு பாங்க்யைநம:
ககுபந்தாயைநம:
கரிப்ரியாயைநம:
கேஸர்யைநம:
கேசவனுதாயைநம: (150)
கதம்பகுஸும ப்ரியாயைநம:
காளிந்த்யைநம.
காளிகாயைநம:
காஞ்ச்யைநம:
கலசோத்பவஸம்ஸ்துதாயைநம:
காமமாதாயைநம:
க்ரதுமத்யைநம:
காமரூபாயைநம:
க்ருபாவத்யைநம:
குமார்யைநம: (160)
குண்டநிலயாயைநம:
கிராத்யைநம:
கீரவாஹநாயைநம:
கைகேய்யைநம:
கோகிலா லாபாயைநம:
கேதகீ குஸுமப்ரியாயைநம:

கமண்டலுதராயைநம:
காள்யைநம:
கர்ம நிர்மூலகாரிண்யைநம:
கலஹம்ஸ கத்யைநம: (170)
கக்ஷாக்ருதகௌதுகமங்களாயை
கஸ்தூரீதிலகாயைநம:
கம்ராயைநம:
கரீந்த்ரகமனாயைநம:
குஹ்வைநம:
கர்ப்பூர லேபனாயைநம:
கிருஷ்ணாயைநம:
கபிலாயைநம:
குஹராஶ்ரயாயைநம:
கூடஸ்தாயைநம: (180)
குதராயைநம:
கம்ராயைநம:
குக்ஷிஸ்தாகிலவிஷ்டபாயைநம:
கட்ககேட கராயைநம:
கர்வாயைநம:
கேசர்யைநம:
ககவாஹனாயைநம:
கட்வாங்க தாரிண்யைநம:
க்யாதாயைநம:
ககராஜோபரிஸ்திதாயைநம:
கலக்ந்யைநம:
கண்டிதஜராயைநம:
கண்டாக்யான ப்ரதாயிந்யைநம:
கண்டேந்து திலகாயைநம:
கங்காயைதம:
கணேசகுஹ பூஜிதாயைநம:
காயத்ர்யைநம:
கோமத்யைநம:
கீதாயைநம:
காந்தார்யைநம: (200)
கான லோலுபாயைநம:
கௌதம்யைநம:
காமிந்யைநம:
காதாயைநம:
கந்தர்வாப்ஸர ஸேவிதாயைநம:
கோவிந்தசரணாக்ராந்தாயைநம:
குணத்ரயவிபாவிதாயைநம:
கந்தர்வ்யைநம:
கஹ்வர்யைநம:
கோத்ராயைநம: (210)
கிரீசாயைநம:
கஹனாயைநம:
கம்யைநம:
குஹாவாஸாயைநம:
குணவத்யைநம:
குருபாபப்ரணாசிந்யைநம:
குர்வ்யைநம:
குணவத்யைநம:
குஹ்யைநம:
கோப்தவ்யாயைநம: (220)
குணதாயிந்யைநம:
கிரிஜாயைநம:
குஹ்யமாதங்க்யைநம:
கருடத்வஜவல்லபாயைநம:
கர்வாபஹாரிண்யைநம:
கோதாயைநம:
கோகுலஸ்தாயைநம:
கதாதராயைநம:
கோகர்ணநிலயாஸக்தாயைநம:
குஹ்யமண்டலவர்த்திந்யை (230)
கர்மதாயைநம:
கநதாயைநம:
கண்டாயைநம:
கோரதானவ மர்திந்யைநம:
க்ருணிமந்த்ர மயைநம:
கோஷாயைநம:
கனஸம்பாத தாயிந்யைநம:
கண்டாரவப்ரியாயைநம:
க்ராணாயைநம:
க்ருணிஸந்துஷ்டகாரிண்யை (240)
கநாரிமண்டலாயைநம:
கூர்ணாயைநம:
க்ருதாச்யைநம:
கநவேகின்யைநம:
ஜ்ஞானதாதுமய்யைநம:
சர்ச்சாயைநம:
சர்ச்சிதாயைநம:
சாருஹாஸிந்யைநம:
சடுலாயைநம:
சண்டிகாயைநம: (250)
சித்ராயைநம:
சித்ரமால்யவிபூஷிதாயைநம:
சதுர்புஜாயைநம:
சாருதந்தாயைநம:
சாதுர்யைநம:
சரிதப்ரதாயைநம:
சூலிகாயைநம:
சித்ரவஸ்த்ராந்தாயைநம:
சந்த்ரம: கர்ணகுண்டலாயைநம:
சந்த்ரஹாஸாயைநம: (260)
சாருதாத்ர்யைநம:
சகோர்யைநம:

சந்த்ரஹாஸிந்யைநம:
சந்த்ரிகாயைநம:
சந்த்ரதாத்ர்யைநம:
சௌர்யைநம:
சோராயைநம:
சண்டிகாயைநம:
சஞ்சத்வாக்வாதிந்யைநம:
சந்திரசூடாயைநம: (270)
சோரவிநாஶிந்யைநம:
சாருசந்தனலிப்தாங்க்யைநம:
சஞ்சச்சாமரவீஜிதாயைநம:
சாருமத்யாயைநம:
சாருகத்யைநம:
சந்திலாயைநம:
சந்த்ரரூபிண்யைநம:
சாருஹோமப்ரியாயைநம:
சார்வா சரிதாயைநம:
சக்ரபாஹுகாயைநம: (280)
சந்த்ரமண்டல மத்யஸ்தாயைநம:
சந்த்ரமண்டலதர்ப்பணாயைநம:
சக்ரவாகஸ்தந்யைநம:
சேஷ்டாயைநம:
சித்ராயைநம:
சாருவிலாஸிந்யைநம:
சித்ஸ்வரூபாயைநம:
சந்த்ரவத்யைநம:
சந்த்ரமாயைநம:
சந்தனப்ரியாயைநம: 290
சோதயித்ரியைநம:
சிரப்ரக்ஞாயைநம:
சாதகாயைநம:
சாருஹேதுக்யைநம:
சத்ரயாதாயைநம:
சத்ரதராயைநம:
சாயாயைநம:
சந்த: பரிச்சதாயைநம:
சாயாதேவ்யைநம:
சித்ரநகாயைநம: 300
சந்நேந்த்ரிய விஸர்ப்பிண்யைநம:
சந்தோநுஷ்டுப்ரதிஷ்டாந்தாயை
சித்ரோபத்ரவபேதிந்யைநம:
சேதாயைநம:
சத்ரேஶ்வர்யைநம:
சிந்நாயைநம:
சுரிகாயைநம:
சேதனப்ரியாயைநம:
ஜநந்யைநம:
ஜந்மரஹிதாயைநம: 310

ஜாதவேதாயைநம:
ஜகந்மய்யைநம:
ஜாந்நவ்யைநம:
ஜடிலாயைநம:
ஜேத்ர்யைநம:
ஜராமரணவர்ஜிதாயைநம:
ஜம்பூத்வீபவத்யைநம:
ஜ்வாலாயைநம:
ஜயந்த்யைநம:
ஜலஶாலிந்யைநம: 320
ஜிதேந்திரியாயைநம:
ஜிதக்ரோதாயைநம:
ஜிதாமித்ராயைநம:
ஜகத்ப்ரியாயைநம:
ஜாதரூபமய்யைநம:
ஜிஹ்வாயைநம:
ஜானக்யைநம:
ஜகத்யைநம:
ஜராயைநம:
ஜநித்ர்யைநம: 330
ஜன்ஹுதநயாயைநம:
ஜகத்ரயஹிதைஷிண்யைநம:
ஜ்வாலாமுக்யைநம:
ஜபவத்யைநம:
ஜ்வரக்ந்யைநம:
ஜிதவிஷ்டபாயைநம:
ஜிதாக்ராந்தமய்யைநம:
ஜ்வாலாயைநம:
ஜாக்ரத்யைநம:
ஜ்வரதேவதாயைநம: 340
ஜ்வலந்த்யைநம:
ஜலதாயைநம:
ஜ்யேஷ்டாயைநம:
ஜ்யாகோஷாஸ்போடதிங்முக்யை
ஜம்பிந்யைநம:
ஜ்ரும்பணாயைநம:
ஜ்ரும்பாயைநம:
ஜ்வலந்மாணிக்யகுண்டலாயைநம:
ஜிஞ்ஜிகாயைநம:
ஜணநிர்கோஷாயைநம: 350
ஜஞ்ஜாமாருதவேகின்யைநம:
ஜல்லரீவாத்யகுஶலாயைநம:
ஞரூபாயைநம:
ஞபுஜாஸ்ம்ருதாயைநம:
டங்கபாணஸமாயுக்தாயைநம:
டங்கின்யைநம:
டங்கபேதின்யைநம:
டங்கீகணக்ருதாகோஷாயைநம:

டங்கநீயமஹோரஸாயைநம:
டங்காரகாரிணீதேவ்யைநம:
டடசப்தநிநாதிந்யைநம:
டாமர்யைநம:
டாகின்யைநம:
டிம்பாயைநம:
டுண்டமாரைகநிர்ஜிதாயைநம:
டாமரீதந்த்ரமார்கஸ்தாயைநம:
டமட்டமருநாதிந்யைநம:
டிண்டீரவஸஹாயைநம:
டிம்பலஸத்க்ரீடாபராயணுயைநம:
டுண்டிவிக்நேசஜநந்யைநம:
டக்காஹஸ்தாயைநம:
டிலிவ்ரஜாயைநம:
நித்யக்ஞானுயைநம:
நிரூபமாயைநம:
நிர்குணுயைநம:
நர்மதாநத்யைநம:
திரிகுணுயைநம:
திரிபதாயைநம:
தந்த்யைநம:
துளஸ்யைநம: 380
தருணுயைநம:
தருவேநம:
திரிவிக்ரமபதாகாந்தாயைநம:
துரீயபதகாமிந்யைநம:
தருணுதித்யஸங்காசாயைநம:
தாமஸ்யைநம:
துஹிநாயைநம:
துராயைநம:
திரிகாலக்ஞானஸம்பந்நாயைநம:
த்ரிவல்யைநம: 390
த்ரிலோசனுயைநம:
த்ரிசக்த்யைநம:
த்ரிபுராயைநம:
துங்காயைநம:
துரங்கவதனுயைநம:
திமிங்கிலகிலாயைநம:
தீவ்ராயைநம:
த்ரிஸ்ரோதாயைநம:
தாமஸாதிந்யைநம:
தந்த்ரமந்த்ரவிசேஷக்ஞாயைநம:
தநுமத்யாயைநம:
த்ரிவிஷ்டபாயைநம:
த்ரிஸந்த்யாயைநம:
த்ரிஸ்தந்யைநம:
தோஷாஸம்ஸ்தாயைநம:

தாலப்ரதாபிந்யைநம:
தாடங்கிந்யைநம:
துஷாராபாயைநம:
துஹிநாசலவாஸிந்யைநம:
தந்துஜாலஸமாயுக்தாயைநம:
தாரஹாராவலிப்ரியாயைநம:
திலஹோமப்ரியாயைநம:
தீர்த்தாயைநம:
தமாலகுஸுமாக்ருத்யைநம:
தாரகாயைநம:
த்ரியுதாயைநம:
தன்வ்யைநம:
த்ரிசங்குபரிவாரிதாயைநம:
தலோதர்யைநம:
திலாபூஷாயைநம: 420
தாடங்கப்ரியவாஹிந்யைநம:
த்ரிஜடாயைநம:
தித்திர்யைநம:
த்ரிஷ்ணுயைநம:
த்ரிவிதாயைநம:
தருணுகிருத்யைநம:
தப்தகாஞ்சனஸங்காசாயைநம:
தப்தகாஞ்சனபூஷணுயைநம:
த்ரியம்பகாயைநம:
த்ரிவர்காயைநம: 430
த்ரிகாலக்ஞானதாயிந்யைநம:
தர்ப்பணுயைநம:
த்ருப்திதாயைநம:
த்ருப்தாயைநம:
தாமஸ்யைநம:
தும்பருஸ்துதாயைநம:
தார்க்ஷ்யஸ்தாயைநம:
த்ரிகுணுகாராயைநம:
த்ரிபங்க்யைநம:
தநுவல்லர்யைநம: 440
தாத்கார்யைநம:
தாரவாயைநம:
தாந்தாயைநம:
தோஹிந்யைநம:
தீநவத்ஸலாயைநம:
தாநவாந்தகர்யைநம:
துர்காயைநம:
துர்காஸுரநிபர்ஹிண்யைநம:
தேவரீத்யைநம:
திவாயைநம: 450
ராத்ர்யைநம:
த்ரௌபத்யைநம:

துந்துபிஸ்வனையைநம:
தேவயாந்யைநம:
துராவாஸாயைநம:
தாரித்ரியோத்பேதிந்யைநம:
திவாயைநம:
தாமோதரப்ரியாயைநம:
தீப்தாயைநம:
திக்வாஸாயைநம: 460
திக்விமோஹிந்யைநம:
தண்டகாரண்யநிலயாயைநம:
தண்டிந்யைநம:
தேவபூஜிதாயைநம:
தேவவந்த்யாயைநம:
திவிஷதாயைநம:
த்வேஷிண்யைநம:
தானவாக்ருத்யைநம:
தீனநாதஸ்துதாயைநம:
தீக்ஷாயைநம: 470
தைவதாயைநம:
திஸ்ரூபிண்யைநம:
தாத்ர்யைநம:
தநுர்தராயைநம:
தேந்வைநம:
தாரிண்யைநம:
தர்மசாரிண்யைநம:
தரந்தராயைநம:
தராயைநம:
தாராயைநம: 480
தனதாயைநம:
தான்யதோஹின்யைநம:
தர்மஶீலாயைநம:
தநாத்யக்ஷாயைநம:
தநுர்வேதவிஶாரதாயைநம:
த்ருத்யைநம:
தந்யாயைநம:
த்ருதபதாயைநம:
தர்மராஜப்ரியாயைநம:
த்ருவாயைநம: 490
தூமாவத்யைநம:
தூமகேச்யைநம:
தர்மசாஸ்த்ரப்ரகாஶிந்யைநம:
நந்தாயைநம:
நந்தப்ரியாயைநம:
நித்ராயைநம:
ந்ருநுதாயைநம:
நந்தனுத்மிகாயைநம:
நர்மதாயைநம:
நலின்யைநம: 500
நீலாயைநம:
நீலகண்டஸமாஶ்ரயாயைநம:
நாராயணப்ரியாயைநம:
நித்யாயைநம:
நிர்மலாயைநம:
நிர்குணயைதம:
நிதயேநம:
நிராதாராயைநம:
நிரூபமாயைநம:
நித்யஶுத்தாயைநம: 510
நிரஞ்ஜனயைநம:
நாதபிந்துகலாதீதாயைநம:
நாதபிந்துகலாத்மிகாயைநம:
ந்ருஸிம்ஹிந்யை நம:
நகதராயைநம:
ந்ருபநாகவிபூஷிணிதாயைநம:
நரகக்லேஶஶமன்யைநம:
நாராயணபதோத்பவாயைநம:
நிரவத்யாயைநம:
நிராகாராயைநம: 520
நாரதப்ரியகாரிண்யைநம:
நானஜ்யோதி:ஸமாக்யாதாயைநம:
நிதிதாயைநம:
நிர்மலாத்மிகாயைநம:
நவஸத்ரதராயைநம:
நீத்யைநம:
நிருபத்ரவகாரிண்யைநம:
நந்தஜாயைநம:
நவரத்நாட்யைநம:
நைமிஷாரண்யவாஸிந்யைநம: 530
நவநீதப்ரியாயைநம:
நார்யைநம:
நீலஜீமூதநிஸ்வனயைநம:
நிமேஷிண்யைநம:
நதீரூபாயைநம:
நீலக்ரீவாயைநம:
நிஶீஶ்வர்யைநம:
நாமாவள்யைநம:
நிஶும்பக்ந்யைநம:
நாகலோகநிவாஸிந்யைநம: 540
நவஜாம்பூனதபிரக்யாயைநம:
நாகலோகாதிதேவதாயைநம:
நூபுராக்ராந்தசரணயைநம:
நரசித்தப்ரமோதிந்யைநம:
நிமக்நாரக்தநயனயைநம:
நிர்காதஸமநிஸ்வனயைநம:
நந்தனோத்யானநிலயாயைநம:
நிர்வ்யூஹோபரிசாரிண்யைநம:

பார்வத்யை நம:
பரமோதாராயை நம: 550
பரப்ரஹ்மாத்மிகாயை நம:
பராயை நம:
பஞ்சகோசவிநிர்முக்தாயை நம:
பஞ்சபாதகநாசிந்யை நம:
பரசித்தவிதானஜ்ஞ்யை நம:
பஞ்சிகாயை நம:
பஞ்சரூபிண்யை நம:
பூர்ணிமாயை நம:
பரமாயை நம:
ப்ரீத்யை நம: 560
பரதேஜப்ரகாசிந்யை நம:
புராண்யை நம:
பௌருஷ்யை நம:
புண்யாயை நம:
புண்டரீகநிபேக்ஷணுயை நம:
பாதாளதலநிர்மக்னுயை நம:
ப்ரீதாயை நம:
ப்ரீதிவிவர்திந்யை நம:
பாவந்யை நம:
பாதஸஹிதாயை நம: 570
பேசலாயை நம:
பவநாசிந்யை நம:
ப்ரஜாபத்யை நம:
பரிச்ராந்தாயை நம:
பர்வதஸ்தனமண்டலாயை நம:
பத்மப்ரியாயை நம:
பத்மஸம்ஸ்தாயை நம:
பத்மாக்ஷ்யை நம:
பத்மஸம்பவாயை நம:
பத்மபத்ராயை நம: 580
பத்மபதாயை நம:
பத்மிந்யை நம:
ப்ரியபாஷிண்யை நம:
பசுபாசவிநிர்முக்தாயை நம:
புரந்த்ர்யை நம:
புரவாஸிந்யை நம:
புஷ்கலாயை நம:
புருஷாயை நம:
பர்வாயை நம:
பாரிஜாதஸுமப்ரியாயை நம: 590
பதிவ்ரதாயை நம:
பவித்ராங்க்யை நம:
புஷ்பஹாஸபராயணுயை நம:
ப்ரஜ்ஞாவதீஸுதாயை நம:
பௌத்ர்யை நம:
புத்ரபூஜ்யாயை நம:
பயஸ்விந்யை நம:
பட்டிபாசதராயை நம:
பங்க்த்யை நம:
பிதுர்லோகப்ரதாயிந்யை நம: 600
புராண்யை நம:
புண்யசீலாயை நம:
ப்ரணதார்த்திவிநாசிந்யை நம:
ப்ரத்யும்நஜநன்யை நம:
புஷ்டாயை நம:
பிதாமஹபரிக்ரஹாயை நம:
புண்டரீகபுராவாஸாயை நம:
புண்டரீகஸமானனுயை நம:
ப்ருதுஜங்காயை நம:
ப்ருதுபுஜாயை நம: 610
ப்ருதுபாதாயை நம:
ப்ருதூதர்யை நம:
ப்ரவாளசோபாயை நம:
பிங்காளக்ஷ்யை நம:
பீதவாஸாயை நம:
ப்ரசாபலாயை நம:
ப்ரஸவாயை நம:
புஷ்டிதாயை நம:
புண்யாயை நம:
ப்ரதிஷ்டாயை நம: 620
ப்ரணவாகத்யை நம:
பஞ்சவர்ணுயை நம:
பஞ்சவாண்யை நம:
பஞ்சிகாயை நம:
பஞ்ஜரஸ்திதாயை நம:
பரமாயாயை நம:
பரஜ்யோதிஷே நம:
பரப்ரீத்யை நம:
பராகத்யை நம:
பராகாஷ்டாயை நம: 630
பரேசாந்யை நம:
பாவிந்யை நம:
பாகவத்யுத்யை நம:
புண்யபத்ராயை நம:
பரிச்சேத்யாயை நம:
புஷ்பஹாஸாயை நம:
ப்ரிதூதர்யை நம:
பீதாங்க்யை நம:
பீதவஸநாயை நம:
பீதசையாயை நம: 640
பிசாசிந்யை நம:
பீதக்ரியாயை நம:
பிசாசக்ந்யை நம:
பாடலாக்ஷ்யை நம:

படுக்ரியாயைநம:
பஞ்சபக்ஷ்யப்ரியாசாராயைநம:
பூதநாப்ராணகாதிந்யைநம:
புந்நாகவநமத்யஸ்தாயைநம:
புண்யதீர்த்தநிஷேவிதாயைநம:
பஞ்சாங்க்யைநம: 650
பராஶக்த்யைநம:
பரமாஹ்லாதகாரிண்யைநம:
புஷ்பகாண்டஸ்திதாயைநம:
பூஷாயைநம:
போஷிதாகிலவிஷ்டபாயைநம:
பாநப்ரியாயைநம:
பஞ்சஶிகாயைநம:
பந்நகோபரிஶாயிந்யைநம:
பஞ்சமாத்ராத்மிகாயைநம:
ப்ரிதிவ்யைநம: 660
பதிகாயைநம:
ப்ருதுதோஹிந்யைநம:
புராணந்யாயமீமாம்ஸாயைநம:
பாடலீபுஷ்பகந்திந்யைநம:
புண்யப்ரஜாயைநம:
பாரதாத்ர்யைநம:
பரமார்கைககோசராயைநம:
ப்கவாளஶோபாயைநம:
பூர்ணுஶாயைநம:
ப்ரணவாயைநம: 670
பல்லவோதர்யைநம:
பலிந்யைநம:
பலதாயைநம:
பல்கவேநம:
பூத்கார்யைநம:
பலகாக்ருத்யைநம:
பணீந்த்ரபோகஶயனுயைநம:
பணிமண்டலமண்டிதாயைநம:
பாலபாலாயைநம:
பஹுமதாயைநம: 680
பாலாதபநிபாம்ஶுகாயைநம:
பலபத்ரப்ரியாயைநம:
வந்த்யாயைநம:
படபாயைநம:
புத்திஸம்ஸ்துதாயைநம:
பந்தீதேவ்யைநம:
பிலவத்யைநம:
படிஶக்ந்யைநம:
பலிப்ரியாயைநவ:
பாந்தவ்யைநம: 690
போதிதாயைநம:
புத்யைநம:
பந்தூககுஸுமப்ரியாயைநம:
பாலபாநுப்ரபாகாராயைநம:
ப்ராம்ஹ்யைநம:
ப்ராம்ஹணதேவதாயைநம:
ப்ருஹஸ்பதிஸ்துதாயைநம:
ப்ருந்தாயைநம:
ப்ருந்தாவநவிஹாரிண்யைநம:
பாலாகிந்யைநம: 700
பிலாஹாராயைநம:
பிலவாஸாயைநம:
பஹுதகாயைநம:
பஹுநேத்ராயைநம:
பஹுபதாயைநம:
பஹுகர்ணுவதம்ஸிகாயைநம:
பஹுபாஹுயுதாயைநம:
பீஜரூபிண்யைநம:
பஹுரூபிண்யைநம:
பிந்துநாதகலாதீதாயைநம: 710
பிந்துநாதஸ்வரூபிண்யைநம:
பத்தகோதாங்குளித்ராணுயைநம:
பதர்யாஶ்ரமவாஸிந்யைநம:
ப்ருந்தாரகாயைநம:
ப்ருஹத்ஸ்கந்தாயைநம:
ப்ருஹத்யைநம:
பாணபாதிந்யைநம:
ப்ருந்தாத்யக்ஷாயைநம:
பஹுநுதாயைநம:
வநிதாயைநம: 720
பஹுவிக்ரமாயைநம:
பத்தபத்மாஸநாஸீநாயைநம:
பில்வபத்ரதலஸ்திதாயைநம:
போதித்ருமநிஜாவாஸாயைநம:
படிஸ்தாயைநம:
பிந்துதர்ப்பணுயைநம:
பாலாயைநம:
பாணுஸனவத்யைநம:
படபானலவேகின்யைநம: [730
ப்ரஹ்மாண்டபஹிரந்தஸ்தாயைநம:
பிரஹ்மகங்கணஸுத்ரிண்யைநம:
பவாந்யைநம:
பீஷணவத்யைநம:
பாவிந்யைநம:
பயஹாரிண்யைநம:
பத்ரகாள்யைநம:
புஜங்காக்ஷ்யைநம:
பாரத்யைநம:
பாரதாஶயாயைநம:
பைரவ்யைநம: 740

பீஷணுகாராயைநம:
பூதிதாயைநம:
பூதிமாலிந்யைநம:
பாமின்யைநம:
போகநிரதாயைநம:
பத்ரதாயைநம:
பூரிவிக்ரமாயைநம:
பூதவாஸாயைநம:
ப்ருகுலதாயைநம: 750
பார்கவ்யைநம:
பூஸுரார்ச்சிதாயைநம:
பாகீரத்யைநம:
போகவத்யைநம:
பவநஸ்தாயைநம:
பிஷக்வராயைநம:
பாமிந்யைநம:
போகிந்யைநம:
பாஷாயைநம:
பவாந்யைநம:
பூரிதக்ஷிணுயைநம: 760
பர்காத்மிகாயைநம:
பீமவத்யைநம:
பவபந்தவிமோசிந்யைநம:
பஜனீயாயைநம:
பூததாத்ர்யைநம:
ரஞ்ஜிதாயைநம:
புவநேச்வர்யைநம:
புஜங்கவலயாயைநம:
பீமாயைநம:
பேருண்டாயைநம: 770
பாகதேயிந்யைநம:
மாதாயைநம:
மாயாயைநம:
மதுமத்யைநம:
மதுஜிஹ்வாயைநம:
மதுப்ரியாயைநம:
மஹாதேவ்யைநம:
மஹாபாகாயைநம:
மாலிந்யைநம:
மீநலோசனுயைநம: 780
மாயாதீதாயைநம:
மதுமத்யைநம:
மதுமாம்ஸாயைநம:
மதுத்ரவாயைநம:
மானவ்யைநம:
மதுஸம்பூதாயைநம:
மிதிலாபுரவாஸிந்யைநம:
மதுகைடபஸம்ஹர்த்ர்யைநம:
மேதிந்யைநம:
மேகமாலிந்யைநம: 790
மந்தோதர்யைநம:
மஹாமாயாயைநம:
மைதில்யைநம:
மஸ்ருணப்ரியாயைநம:
மஹாலக்ஷ்ம்யைநம:
மஹாகாள்யைநம:
மஹாகந்யாயைநம:
மஹேஶ்வர்யைநம:
மாஹேந்த்ர்யைநம:
மேருதநயாயைநம: 800
மந்தாரகுஸுமார்ச்சிதாயைநம:
மஞ்ஜுமஞ்ஜீரசரணுயைநம:
மோக்ஷதாயைநம:
மஞ்ஜுபாஷிண்யைநம:
மதுரத்ராவிண்யைநம:
முத்ராயைநம:
மலயாயைநம:
மலயாந்விதாயைநம:
மேதாயைநம:
மரகதஶ்யாமாயைநம: 810
மாகத்யைநம:
மேனகாத்மஜாயைநம:
மஹாமார்யைநம:
மஹாவீராயைநம:
மஹாஶ்யாமாயைநம:
மநுஸ்துதாயைநம:
மாத்ருகாயைநம:
மிஹிராபாஸாயைநம:
முகுந்தபதவிக்ரமாயைநம:
மூலாதாரஸ்திதாயைநம: 820
முக்தாயைநம:
மணிபூரகவாஸிந்யைநம:
ம்ருகாக்ஷ்யைநம:
மஹிஷாரூடாயைநம:
மஹிஷாஸுரமர்திந்யைநம:
யோகாஸனுயைநம:
யோககம்யாயைநம:
யோகாயைநம:
யௌவநகாஶ்ரயாயைநம:
யௌவந்யைநம: 830
யுத்தமத்யஸ்தாயைநம:
யமுனுயைநம:
யுகதாரிண்யைநம:
யக்ஷிண்யைநம:
யோகயுக்தாயைநம:
யக்ஷராஜப்ரஸூதிந்யைநம:

யாத்ராயைநம:
யானவிதானஜ்ஞாயைநம:
யதுவம்ஶஸமுத்பவாயைநம:
யகாராதிஹகாராந்தாயைநம: 840
யாஜுஷ்யைநம:
யஜ்ஞரூபிண்யைநம:
யாமிந்யைநம:
யோகநிரதாயைநம:
யாதுதானபயங்கர்யைநம:
ருக்மிண்யைநம:
ரமண்யைநம:
ராமாயைநம:
ரேவத்யைநம:
ரேணுகாயைநம: 850
ரத்யைநம:
ரௌத்ர்யைநம:
ரௌத்ரப்ரியாகாராயைநம:
ராமமாதாயைநம:
ரதிப்ரியாயைநம:
ரோஹிண்யைநம:
ராஜ்யதாயைநம:
ரேவாயைநம:
ரமாயைநம:
ராஜீவலோசனாயைநம: 860
ராகேஶ்யைநம:
ரூபஸம்பந்நாயைநம:
ரத்நஸிம்ஹாஸநஸ்திதாயைநம:
ரக்தமால்யாம்பரதராயைநம:
ரக்தகந்தாநுலேபனாயைநம:
ராஜஹம்ஸஸமாரூடாயைநம:
ரம்பாயைநம:
ரக்தபலிப்ரியாயைநம:
ரமணீயயுகாதாராயைநம:
ராஜிதாகிலபூதலாயைநம: 870
ருருசர்மபரீதானாயைநம:
ரதின்யைநம:
ரத்னமாலிகாயைநம:
ரோகேஶ்யைநம:
ரோகஶமந்யைநம:
ராவிண்யைநம:
ரோமஹர்ஷிண்யைநம:
ராமசந்த்ரபதாக்ராந்தாயைநம:
ராவணச்சேதகாரிண்யைநம:
ரத்நவஸ்த்ரபரிச்சந்நாயைநம: 880
ரதஸ்தாயைநம:
ருக்மபூஷணாயைநம:
லஜ்ஜாதிதேவதாலோலாயைநம:
லலிதாயைநம:
லிங்கதாரிண்யைநம:
லக்ஷ்ம்யைநம:
லோலாயைநம:
லுப்தவிஷாயைநம:
லோகின்யைநம:
லோகவிஶ்ருதாயைநம: 890
லஜ்ஜாயைநம:
லம்போதரீதேவ்யைநம:
லலநாயைநம:
லோகதாரிண்யைநம:
வரதாயைநம:
வந்திதாயைநம:
வித்யாயைநம:
வைஷ்ணவ்யைநம:
விமலாக்ருத்யைநம:
வாராஹ்யைநம: 900
விரஜாயைநம:
வர்ஷாயைநம:
வரலக்ஷ்ம்யைநம:
விலாஸிந்யைநம:
விநதாயைநம:
வ்யோமமத்யஸ்தாயைநம:
வாரிஜாஸநஸம்ஸ்திதாயைநம:
வாருண்யைநம:
வேணுஸம்பூதாயைநம:
வீதிஹோத்ராயைநம: 910
விரூபிண்யைநம:
வாயுமண்டலமத்யஸ்தாயைநம:
விஷ்ணுரூபாயைநம:
விதிப்ரியாயைநம:
விஷ்ணுபத்நியைநம:
விஷ்ணுமத்யைநம:
விஶாலாக்ஷ்யைநம:
வஸுந்தராயைநம:ம:
வாமதேவப்ரியாயைந
வேலாயைநம: 920
வஜ்ரிண்யைநம:
வஸுதோஹிந்யைநம:
வேதாக்ஷரபரீதாங்க்யைநம:
வாஜபேயபலப்ரதாயைநம:
வாஸவ்யைநம:
வாமஜநந்யைநம:
வைகுண்டநிலயாயைநம:
வராயைநம:
வ்யாஸப்ரியாயைநம:
வர்மதராயைநம: 930
வால்மீகிபரிஸேவிதாயைநம:
ஶாகம்பர்யைநம:

ஶிவாயைநம:
ஶாந்தாயைநம:
ஶாரதாயைநம:
ஶரணாகத்யைநம:
ஶாதோதர்யைநம:
ஶுபாசாராயைநம:
ஶும்பாஸுரவிமர்திந்யைநம:
ஶோபாவத்யைநம: 940
ஶிவாகாராயைநம:
ஶங்கரார்தஶரீரிண்யைநம:
ஶோணாயைநம:
ஶுபாஶயாயைநம:
ஶுப்ராயைநம:
ஶரஸ்ஸந்தானகாரிண்யைநம:
ஶராவத்யைநம:
ஶராநந்தாயைநம:
ஶரத்ஜ்யோத்ஸ்நாயைநம:
ஶுபாநநாயைநம: 950
ஶரபாயைநம:
ஶுலிந்யைநம:
ஶுத்தாயைநம:
ஶபர்யைநம:
ஶுகவாஹநாயைநம:
ஶ்ரீமத்யைநம:
ஶ்ரீதராநந்தாயைநம:
ஶ்ரவணாநந்ததாயிந்யைநம:
ஶர்வாண்யைநம:
ஶர்வரீவந்த்யாயைநம: 960
ஷட்பாஷாயைநம:
ஷட்ருதுப்ரியாயைநம:
ஷடாதாரஸ்திதாதேவ்யைநம:
ஷண்முகப்ரியகாரிண்யைநம:
ஷடங்கரூபாயைநம:
ஸுமத்யைநம:
ஸுரஸுரநமஸ்க்ருதாயைநம:
ஸரஸ்வத்யைநம:
ஸதாதாராயைநம:
ஸர்வமங்களகாரிண்யைநம: 970
ஸாமகானப்ரியாயைநம:
ஸுக்ஷ்மாயைநம:
ஸாவித்ரியைநம:
ஸாமஸம்பவாயைநம:
ஸர்வாவாஸாயைநம:
ஸதாநந்தாயைநம:
ஸுஸ்தந்யைநம:
ஸாகராம்பராயைநம:
ஸர்வைஶ்வர்யப்ரியாயைநம:
ஸித்யைநம: 980
ஸாதுபந்துபராக்ரமாயைநம:
ஸப்தர்ஷிமண்டலகதாயைநம:
ஸோமமண்டலவாஸிந்யைநம:
ஸர்வஜ்ஞாயைநம:
ஸாந்த்ரகருணாயைநம:
ஸமாநாதிகவர்ஜிதாயைநம:
ஸர்வோத்துங்காயைநம:
ஸங்கஹீநாயைநம:
ஸத்குணாயைநம:
ஶகலேஷ்டதாயைநம: 990
ஸரகாயைநம:
ஸுர்யதநயாயைநம:
ஸுகேஶ்யைநம:
ஸோமஸம்ஹத்யைநம:
ஹிரண்யவர்ணாயைநம:
ஹரிண்யைநம:
ஹ்ரீங்கார்யைநம:
ஹம்ஸவாஹிந்யைநம:
க்ஷௌமவஸ்த்ரபரீதாங்க்யைநம:
க்ஷீராப்திதநயாயைநம: 1000
க்ஷமாயைநம:
காயத்ர்யைநம:
ஸாவித்ர்யைநம:
பார்வத்யைநம:
ஸரஸ்வத்யைநம:
வேதகர்பாயைநம:
வராரோஹாயைநம:
ஸ்ரீ காயத்ரீ பராம்பிகாயைநம: 1008
(1–155)

சகல பாபங்களைப் போக்கடிப்பதாயும் புண்ணியத்தைக் கொடுப்பதாயும் மகத்தான சம்பத்தைக் கொடுப்பதாயும் இருக்கிற காயத்ரீ ஸகஸ்ரநாமம் இதுவாகும். ஓ முனீந்திரரே! சந்தோஷத்தையுண்டு பண்ணுநின்ற இந்த ஸஹஸ்ரநாமம் பிராமணளோடு அஷ்டம திதியில் விசேஷமாய்ப் படித்து ஜபஹோமங்களும் பூஜை தியானங்களும் விசேஷமாய்ச் செய்யவேண்டியது. இந்த ஸஹஸ்ர நாமத்தை ஒருவருக்குங் கொடுக்கக்கூடாது. நல்ல பக்தனுயும்

நல்ல சிஷ்யனுயும் இருக்கிற பிராம்மணனுக்குச் சொல்லவேண்டியது. சாதகன் பந்துவாயிருந்தாலும் பிரஷ்டனுயிருப்பானுயின் அவனுக்குக் காண்பிக்கக்கூடாது. எவனது கிருகத்தில் இந்த ஸஹஸ்ரநாமம் இருக்கிறதோ அவனுக்கு ஓரிடத்திலிருந்தும் பயம் வராது. மஹாலக்ஷ்மி சஞ்சலையாயிருந்தாலும் அவனிடத்தில் ஸ்திரமாயிருப்பாள். இது பரமரகஸ்யமாயும் புண்ணியத்தைக் கொடுப்பதாயும் தரித்திரனுக்கு நிதியையும் முமுக்ஷுக்களுக்கு மோக்ஷத்தையும் காமிகளுக்கு சர்வகாமங்களையும் கொடுப்பதாயுமிருக்கின்றது.

இதைப் படிக்கிறவன் ரோகியாயினும் அரோகியாகிறுன். பந்தத்தில் கட்டுப்பட்டிருப்பினும் அக்கட்டினின்றும் விடுபடுகிறுன். பிரம்மஹத்தி சுராபானம் சுவர்ண அபகரணம் இவைகளைச் செய்தோரும் குருபத்தினியைக் கூடினவரும் ஒருக்கால் படனஞ் செய்யப்பெறுவாராயின் அவர்கள் அவ்வப் பாதகங்களினின்றும் விடுபடுகின்றனர். இவர்களேயன்றி பெறக்கூடாத தானங்களைப் பெறுகின்றவனும் உண்ணக் கூடாதனவற்றை யுண்டவனும் பாஷண்டனும் பொய் சொன்னவனும் இவர்களோடு கூடியிருந்தவனும் படனஞ் செய்வாராயின் அவர்களும் அவ்வப்பாபங்களினின்றும் விடுபடுவர். ஓ நாரதரே! என்னுல் சொல்லப்பட்ட இந்த ஸஹஸ்ரநாம ரகசியமானது பரிசுத்தமாகிய மனிதர்களுக்கு பிரம்ம சாயுச்சியத்தைக் கொடுக்கும். இது சத்தியம், சத்தியம், சம்சயமில்லை. (156–165)

ஓம் தர்மாயை நம:

## 7. தீக்ஷை

நாரதர் கூறுகின்றுர் :—காயத்திரியினது பலத்தையும், மஹா சிரேயஸ்ஸையும் மகா பாக்கியத்தையும் கொடுப்பதா யிருக்கிற ஸஹஸ்ர நாமத்தையும், தேவரீரால் கேட்கப்பெற்றேன். பிரம்ம க்ஷத்திரிய வைசியர்களுக்கும் ஸ்திரீகளுக்கும் எந்தத் தீக்ஷையில்லாமல் அதிகாரஞ் சித்திக்காதோ அந்த உத்தமமான தீக்ஷா விதியை முன் சாமான்யமாகக் கேட்டுள்ளேன். அதனை இப்போது விரிவாகச் சொல்லவேண்டுகிறேன்.

நாராயணர் கூறுகின்றுர் : பரிசுத்தாத்மாக்களா யிருக்கிற சிஷ்யர்களுக்கு எந்தத் தீக்ஷையினுல் தேவாக்னி குரு பூஜைக்கு அதிகாரம் உண்டாகிறதோ, எந்தத் தீக்ஷை திவ்யமான ஞானத்தைக் கொடுத்து அக்ஞானமாகிய பாவத்தை நாசஞ்செய்கிறதோ, எது யாதொரு காரணம் வேண்டாது வெகுபலத்தைக் கொடுக்கிறதோ, குரு சிஷ்யர்கள் அதி பரிசுத்தர்களாக விருப்பதற்கு எதனை யபேக்ஷிக்கின்றுர்களோ, அந்தத் தீக்ஷையைத்தான் தீக்ஷை என்றும் அதனை அவசியம் செய்துகொள்ள வேண்டுமென்றும் நிகமாகமங்களையறிந்த சமர்த்தர்கள் கூறுகின்றனர்.

